# திவாகரம்

முதல் தொகுதி

பதிப்பாசிரியர்

மு. சண்முகம் பிள்ளை

இ. சுந்தரமூர்த்தி

சென்னைப் பல்கலைக் கழகம்

1990

திவாகரம் (முதல் தொகுதி)
A Critical Edition of Tivakara Nikantu (Volume-I)

முதல் பதிப்பு 1990

விலை ரூ. 75-00

பக்கங்கள் (64+518 : 582)

நூல்கள் கிடைக்குமிடம்
இயக்குநர்
பதிப்புத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

ஜனசக்தி அச்சகம்
சென்னை,

# திவாகரம்

## முதல் தொகுதி

பொருளடக்கம்

பயன்பட்டன. இந்நிறுவனங்களில் பணியாற்றிய அன்பர்களும், பிற நண்பர்களும் இப்பணியின்போது பேருதவி புரிந்தனர். இவர்கட்கெல்லாம் அன்பு நிறைந்த நன்றி உரியது.

திவாகர ஆய்வுப் பதிப்பு இரு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. முதல் தொகுதியில் ஆய்வு முன்னுரையும், தெய்வப் பெயர்த் தொகுதி தொடங்கிப் பண்பு பற்றிய பெயர்த் தொகுதி ஈறாக முதல் எட்டுத் தொகுதிகளும் உள்ளன.

ஆய்வு முன்னுரையில் நிகண்டின் தோற்றமும் வளர்ச்சியும், திவாகர நூல் அமைப்பு, திவாகரப் பதிப்புகள், திவாகர ஆய்வுப் பதிப்பு அமைந்துள்ள முறை ஆகியன விளக்கப் பெற்றுள்ளன.

இரண்டாம் தொகுதியில் இறுதி நான்கு தொகுதிகளும், நிகண்டில் அமைந்துள்ள சொற்பொருள் அடைவும் உள்ளன. சொற்பொருளடைவு மிகவிரிந்த நிலையில் பல்வேறு நிலைகளிலும் பொருள் காண்பதற்குத் துணையாகும் வண்ணம் தொகுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கது.

இப்பதிப்பு நன்முறையில் உருவாவதற்குத் துணை நின்ற பெருமக்கள் அனைவருக்கும் நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளோம்.

பதிப்புத் திட்டத்தினை ஏற்றுக் கொண்டு நிதியுதவி நல்கிய பல்கலைக் கழக நிதி நல்கைக் குழுவிற்கும்,இப் பதிப்பினை வெளியிடுவதற்கு இசைவளித்த சென்னைப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் பதிவாளர், பதிப்புத்துறையினர் அனைவருக்கும் நன்றி உரியது.

ஆண்டுகள் பலவாயினும் நன்முறையில் அச்சிட்டுதவிய ஜனசக்தி அச்சகத்தார்க்கும், அச்சாகும்போது அவ்வப்போது உறுதுணை புரிந்த ஆய்வு மாணவர்கட்கும் நன்றி உரியது.

பல்லாண்டு முயற்சியின் பயனாக இப்பெரு நூற்பதிப்பு வெளி வருவதற்கு இன்னும் பல நண்பர்கள் துணைநின்று ஊக்குவித்தனர். இவர்கட்கெல்லாம் எங்கள் உளங்கனிந்த நன்றி உரியது.

நிகண்டுப் பதிப்புகளுக்கெல்லாம் முன்னோடியாகவும் வழி காட்டியாயும் விளங்கிய பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை அவர்களின் நூற்றாண்டு தொடங்கும் நாளில் அவருக்கு இப் பதிப்பினைக் காணிக்கையாக்குவதில், பெருமகிழ்வு கொள்கிறோம்.

தமிழ் மொழியின் சொற்பொருள் வளத்தை அறிஞருலகு இப் பதிப்பு நூலின் வழி அறிந்து மகிழும் என்று நம்புகின்றோம். தமிழ்கூறு நல்லுலகம் இதனை ஏற்றுப் போற்றி வரவேற்குமாறு பெரிதும் வேண்டுகின்றோம்.

சென்னை
12-10-90

மு. சண்முகம் பிள்ளை
இ. சுந்தரமூர்த்தி
பதிப்பாசிரியர்

# முன்னுரை

## நிகண்டுகளின் தோற்றமும் வளர்ச்சியும்

### நிகண்டுகளின் தனித் தன்மை

மொழிப்புலமை பெறுவதற்குத் துணை நிற்கும் கருவிநூல்களுள் முதன்மையானது நிகண்டு நூலாகும். முன்னையோர் நிகண்டுகள் கற்ற பின்னரே இலக்கிய நூல்களைக் கற்றனர் என்பது மரபு வழிச் செய்தியாகும். நிகண்டு என்னும் சொல்லுக்குத் தொகுதி அல்லது கூட்டம் என்று பொருள் கொள்வர். திணை வகைமையில் அமைந்த பெயர்களையும் வினை பற்றிய பெயர்களையும் பாகுபாடு செய்து தொகுத்துக் கூறுவதோடு அமையாது அச்சொற்கள் குறிக்கும் பொருள்களையும் நிகண்டுகள் வரையறுத்துக் கூறும்.

### நிகண்டு என்னும் பெயர் வழக்கு

முதன் முதலில் நிகண்டு வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதீகச் சொற்களின் பொருள்களை உணர்த்தும் கருவி நூலுக்கு மட்டுமே சிறப்பாக வழங்கப் பெற்றது. காலப் போக்கில் சொற்பொருள் உணர்த்தும் நூல்களுக்கெல்லாம் இப் பெயர் வழங்கப்பட்டது. தமிழில் நிகண்டு நூலை 'உரிச்சொல்' என்றும், 'உரிச்சொல்பனுவல்' என்றும் வழங்கினர். ஆனால் இவ்விரு பெயர்களும் நாளடைவில் மறைந்து 'நிகண்டு' என்னும் வடமொழிப் பெயரே நிலைத்துவிட்டது. காங்கேயர் செய்த நூலாகிய உரிச்சொல் நிகண்டு என்னும் நூற்பெயரில் இவ்விரு வடிவங்களையும் காணமுடிகின்றது.

### தொல்காப்பியர் முதல்வழிகாட்டி

சொற்பொருள் உணர்த்தும் மரபு, தொல்காப்பியச் சொல்லதிகார உரியியலில் விளங்குவது இதன் தொன்மை மரபைக் காட்டும். பொருளதிகாரத்திலும் மரபியலிலும் இம்மரபு விளங்குவதைக் காணலாம். தொல்காப்பிய உரியியல், நிகண்டுகளின் அமைப்பிற்கும் தோற்றத்திற்கும் முன்னோடியாய் அமைகின்றது. எனவே சொல் பொருள் உணர்த்தும் மரபிற்குத் தொல்காப்பியரே வழிகாட்டியாய் விளங்கினார் எனலாம்.

### நிகண்டு கற்றலின் அவசியம்

நிகண்டுகள் கற்றலின் சிறப்பை நன்னூல் விருத்தியுரையுள் மாதவச் சிவஞான சுவாமிகள் பின்வருமாறு குறிப்பிடுவர்.

இலக்கணம் கேட்டற்குரியார் எத்தலையரோய் இருத்தல் வேண்டும் என்பது பற்றிக் கூறுமிடத்து,

> "யாவரும் உணர என வே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சியுடையார்க்கே அவற்றை ஆராய்வுழி அவற்றின்கண் உளவாகிய செய்கை வேறுபாடுகளும் சொன் மரபு,பொருள் மரபு வேறுபாடுகளும் இன்னவென்று துணியப் படாமையின் அவற்றைத் துணிந்தறிய வேண்டி இவ்வியற் றமிழ் நூல்கேட்டறிதலின்கண்ணே ஊக்கம் சொல்லுமாகின் அவை ஆராய்ந்த பின்னர் இது கேட்டற்பாற்றென்னும் யாப்பும் அவைஆராய்ந்தோர் இது கேட்டற்கு உரியர் என்னும் கேட்போரும்"

என விளக்குவதால் தமிழ் கற்கத் தொடங்குவார் முதலில் நிகண்டு கற்க வேண்டுவது இன்றியமையாதது என்பது புலனாகும். பிற்காலத்தே சூடாமணி நிகண்டை மனப்பாடம் செய்து ஒப்பிக்கச் சொல்லுவதும் மனங்கொளத்தக்கது. திவாகரம், பிங்கலம் முதலிய பழைய நிகண்டுகளையும், மனப் பாடம் செய்தனர். இந்நாளில் அகராதிகள் பயன்படும் நிலையில் அந்நாளில் நிகண்டுகள் உரிச்சொல், உரிச்சொல் பனுவல்[1] என விளங்கின எனலாம்.

## நிகண்டு நூல் அமைப்பும், பொருள் வரையறையும்

நிகண்டு நூல்களுள் திவாகரமும், பிங்கலமும் தொல்காப்பி யத்தைப் போலவே நூற்பா யாப்பில் அமைந்துள்ளன. சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதற்கு இவ்வகை யாப்பே பெரும்பாலும் பயன்படும். சொற்களின் பொருள்களை எதுகை மோனை நயம் துலங்கவும், எளிதாக மனப்பாடம் செய்வதற்கு ஏற்பவும் இவ்வகை யாப்பு பயன்படுகிறது எனவே நிகண்டுகளின் சொற்பொருள் விளக்க முறைக்குத் தொல்காப்பியமே வழிகாட்டி யாய் விளங்குகிறது.

உருவுட்காகும் புரையுயர் பாகும் (உரி.4)
குருவும் கெழுவும் நிறனாகும்மே (உரி.5)
செழுமை வளனும் கொழுப்புமாகும் (உரி.56)

---

1. 'பிங்கலம் முதலாம் நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே' (நன்-460)

   'பிங்கலம் முதலான உரிச் சொல்பனுவல்களுள்' (நன்-460)-மயிலை நாதர் உரை.

   ஓங்கு இடப கேதனன் கற்று மறவாத தேவைக் கயாதரன் தொல்வேதியன் செய்த உரிச்சொல் பனுவலும் மேம்படுமே (கயாதரம் 2)

என்னும் நூற்பாக்கள் எதுகை நயமும், பொருள் நயமும் பொருந்த விளங்குவதைக் காணலாம். இவ்வமைப்பிலேயே பிற நிகண்டு நூற்பாக்களும் அமைந்திருத்தல் பெரிதும் கருதத்தகும்.

சொற்பொருள்களை வரையறுத்து உணர்த்தும் பகுதி நிகண்டின் முதன்மையான கூறு எனலாம். இப்பகுதி நூலின் இறுதியில் அமைந்து சொற்பொருள் விளக்கக் களஞ்சியமாய்க் காணப்படுகிறது. மேலும் தெய்வப் பெயர் மக்கட் பெயர் முதலியனவாக ஒரு பொருளுக்குரிய பல பெயர்களையும், தொகுத்துக் கூறும் பகுதி நூலின் முதற்பகுதியாக விளங்குகிறது. தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் கருப்பொருள்களைப் பின்வரும் நூற்பா தொகுத்துக் கூறுகின்றது.

''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப'' (தொல்-பொருள்-11)

என்னும் நூற்பா நிகண்டின் தொகுதிக் கூறுபாடு அமைக்க மூலமாயிருக்கவேண்டும் என்பர். இங்கே தெய்வம் முதலில் சுட்டப்படுவது போலவே நிகண்டுகளில் தெய்வப் பெயர் தொகுதி முதலிடம் பெறுகின்றது. விலங்கின் பெயர்த்தொகுதி மரப்பெயர்த்தொகுதி என்பவற்றை மேற்படி நூற்பாவில் வரும் மா, புள், மரம் என்பன காட்டும். உணா, பறை, யாழ் என்பன பல்பொருட் பெயர்த் தொகுதி செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி ஆகியவற்றிற்கு அடியெடுத்துக் கொடுத்தது எனலாம். வேறொரு வகையில் நோக்கினால் உயிர்களின் பிறப்பு முறை கொண்டும் பொருள் களைக் கூறுபடுத்தியிருக்கலாம் என்றும் கருத இடமுண்டு. தேவர் மக்கள் விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் எனும் எழுவகைப் பிறப்பில் தேவர், மக்கள், விலங்கு, மரம் என வரும் நான்கு தொகுதிகளின் பெயர்களுக்கான கரு உள்ளமை யைக் காணலாம்[2].

## நிகண்டுகளின் தோற்றமும் வளர்ச்சியும்

திவாகரம் ஆதிநிகண்டு நூலாகக் கொள்ளப்படுகிறது. 9-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூலே ஏனைய நிகண்டுகளுக் கெல்லாம் வழிகாட்டி எனலாம். திவாகரத்தை அடுத்துத் தோன்றி யது பிங்கல நிகண்டாகும். இதனை அடுத்துத் தோன்றியது உரிச் சொல் நிகண்டு. அதற்குப்பின்னர் இன்றுவரை பல நிகண்டு நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றின் விவரம் கால அடைவில் வருமாறு :

---

2. மு. சண்முகம் பிள்ளை, நிகண்டுச் சொற்பொருட் கோவை, ப.16.

| எண் | காலம் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|---|
| 1. | 9-ம் நூற்றாண்டு | திவாகரம் | திவாகரர் |
| 2. | 10-ம் நூற்றாண்டு | பிங்கலம் (பிங்கலந்தை) | பிங்கலர் |
| 3. | 14 | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் |
| 4. | 15 | கயாதரம் | கயாதரர் |
| 5. | 15 | பாரதிதீபம் | திருவேங்கடபாரதி |
| 6. | 16 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் |
| 7. | 1594 | அகராதி நிகண்டு | இரேவணசித்தர் |
| 8. | 16 | கைலாச நிகண்டு | கைலாசம் |
| 9. | 17 | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப்புலவர் |
| 10. | 1700 | பல்பொருள் சூடாமணி (வடமலை நிகண்டு) | ஈசுரபாரதி |
| 11. | 1732 | சதுரகராதி | வீரமாமுனிவர் |
| 12. | 1769 | அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமந்தைய தேசிகர் |
| 13. | 18 | பொதிகை நிகண்டு | சாமிநாதகவிராயர் |
| 14. | 19 | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணிய கவிராயர் |
| 15. | 19 | பொருட்டொகை நிகண்டு | சுப்ரமணியபாரதி |
| 16. | 1844 | கந்தசுவாமியம் | சுப்ரமணியதீட்சிதர் |
| 17. | 1850 | நாநார்த்ததீபிகை | முத்துசாமிப்பிள்ளை |
| 18. | 18 | தொகைப்பெயர் விளக்கம் | சுப்பிரமணியதீட்சிதர் |
| 19. | ? | இலக்கியத் திறவுகோல் | |
| 20. | ? | அகராதி மோனைக் சகராதியெதுகை | |
| 21. | 1874 | சிந்தாமணி நிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை |
| 22. | 1878 | அபிதான சிந்தாமணிச் செய்யுள் நிகண்டு | கோபால்சாமி நாயக்கர் |
| 23. | 19 | அபிதான மணிமாலை | திருவம்பலத்தின் னமுதம்பிள்ளை |

| | | |
|---|---|---|
| 24. 19 | விரிவு நிகண்டு | அருணாசல நாவலர் |
| 25. 20 | நவமணிக்காரிகை நிகண்டு | அரசஞ்சண்முகனார் |
| 26. 20 | தமிழுரிச்சொற்பனுவல் | கவிராச பண்டிதர் இராமசுப்பிரமணிய நாவலர் |

## திவாகர நிகண்டு

### திவாகரர்

திவாகர நிகண்டினைத் திவாகரர் இயற்றினார். திவாகரன் என்பதற்குச் சூரியன் என்பது பொருளாகும். 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரன் பயந்த பிங்கல முனிவன்' என்று பிங்கல நிகண்டுப் பாயிரம் இவரைப் பின்பற்றியே நிகண்டு இயற்றியதாகக் கூறும். எனவே திவாகரர் என்பதே இயற் பெயராய் இருக்கலாம்.

### ஊர்ப் பெயர்

திவாகரரின் ஊர் பெயர் முதலியவற்றைத் திட்டவட்டமாக அறியக்கூடவில்லை. சோழ நாட்டில் அம்பர் என்னும் ஊரில் வாழ்ந்த சேந்தன் என்னும் வள்ளலைப் பல இடங்களிலும் போற்றிக் குறித்துள்ளார். எனவே இவர் இவ்வள்ளலினுடைய ஆதரவில் வாழ்ந்திருக்கக்கூடும். திவாகரரை ஆதரித்த வள்ளல் சேந்தன் பெயருடன் இணைத்துச் 'சேந்தன் திவாகரம்' என இவர் செய்த நூற் பெயரை வழங்குவர். இப்பெயர் ஆசிரியர் சூட்டியதுதாமா என்பதும் ஐயத்திற்கு இடமாகியுள்ளது என்பர்

### சமயம்

திவாகரர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்று பலரும் குறிப்பிடுவர்.[3] திவாகரருடைய நூல் அருகன் பெயர் தொடக்கமாகவும் சிவன் பெயர் தொடக்கமாகவும் கொண்டு இரு வேறு நிலைகளில் காணப்படுகின்றன. ஆழ்வார் திருநகரி முதலிய இடங்களில் கிடைக்கும் ஏடுகளில் பல அருகன் தொடக்கமாகவே காணப்படுகின்றன. இந்நூலைப் பதிப்பிக்கப் படி எடுத்துவைத்த பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை, மு. இராகவ ஐயங்கார்

---

3. திவாகரத்தை இயற்றிவர் திவாகரர் என்ற ஜைனர். அச்சிட்ட புஸ்தகத்தில் விநாயக வணக்கமும் சிவன் பெயர் என்ற தொடக்கமும் உள்ளன. ஆனால் பழைய ஏட்டுப் பிரதிகளில் இவ்வணக்கம் இல்லை. அருகன் பெயர் என்றே தொடங்குகிறது. (பேராசிரியர். எஸ். வையாபுரிப் பிள்ளை, தமிழிலக்கிய சரித்திரத்தில் காவிய காலம். பக் 164)

ஆகியோர் கையெழுத்துப் பிரதிகளும் இவ்வாறே அமைந்துள்ளன. அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் திவாகரர் சைவ சமயத்தினர் என்னும் கொள்கையினர்.[4]

**காலம்**

திவாகர நிகண்டின் காலமாகக் கி.பி. எட்டாம் நூற்றாண்டினைச் சொல்வர் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை. நாமதீப நிகண்டின் முன்னுரையில் இது குறித்து அவர்தரும் செய்தி வருமாறு :

> "தமிழிலுள்ள நிகண்டுகளில் மிகப் பழமையானது சேந்தன் திவாகரம் அந்நூல் தோன்றிய காலம் இன்னும் நிச்சயிக்கப் பெறவில்லை. அதன்கண் மிகுதியாய் காணப்படும் வட நூற் பொருள்கள் அது சங்க காலத்திற்கு மிகப் பிற்பட்டதென்று உணர்ந்து அதனைச் செய்வித்த அம்பர் கிழான் அருவந்தை புறநானூற்றுக் கல்லாடனார் பாடிய அம்பர்கிழான் அருவந்தையின் வழியிற் பிற்காலத்து விளங்கிய யொருவனாய் இருத்தல் கூடும். தமிழ் நாட்டில் பெருவேந்தர் மூவர் பெயர்களும் அவர்களையடுத்து, 'வேள்புலவரசர்களுக்கு வேந்தர்' என வேள்புலவரசர் பெயரும், பின்னர் குறுநில வேந்தர்கள் பெயர்களும், முறையே அந்நிகண்டுள் கூறப்படுகின்றன. தமிழ் வேந்தர்கள் கொடியோடு ஒப்பச் சளுக்கவரசர்க்குரிய கேழற் கொடியும் விதந்து ஓதப்படுகின்றது.

சளுக்கு வேந்தர்க்கு வேறு பெயர்கள் இல்லாதிருப்பவும் அவர்கள் இன்னார் என ஆட்சி புரிந்த நிலம் பற்றி வலிந்து உணர்த்தப்படுகின்றார்கள். இக்காரணங்களால் சளுக்கிய மரபினர் பிரபல மன்னராய் விளங்கிய காலத்து அஃது இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுதல் தகும். இக்காலம் கி.பி. 7-ஆம்நூற்றாண்டு அல்லது 8-ஆம் நூற்றாண்டு முற்பகுதியாகவேனும் 11ஆம் நூற்றாண்டாக வேனும் இருத்தல் கூடும் என்பது தென் தேச சரிதத்தால் உணரலாகும். பிற் கூறிய காலத்தினராக கொள்ளத்தாகும். இளம்பூரணர் அந்நிகண்டினை எடுத்தாராகலின் (தொல். சொல் 39) அஃது அவர் காலத்திற்கு முற்பட்டது என்பது தேற்றம். குறுநில வேந்தர் பெயராக 'அரட்டர்' என்பது திவாகரப் பிரதி சிலவற்றிற் காணப்படுகின்றது. ராஷ்டிரக் கூடர் (அரட்டர்) குறுநில வேந்தராயிருந்த காலத்து இப் பெயர் தோன்றியிருக்கலாம் என்று ஊகித்தற்கு இடமுண்டு. இஃது உண்மையாயின் ராஷ்டிரகூடம் பிரபலமாய் கி.பி. 750க்கு முன் அந்நூல் தோன்றியதாதல் பெறப்

---

4. தமிழ் இலக்கிய வரலாறு 9-ஆம் நூற்றாண்டு. 135-138.

படும். ஆகவே கி.பி. 8-ம் நூற்றாண்டினைத் திவாகரம் இயற்றப்பெற்ற காலமெனக் கொள்வது பொருந்துமெனத் தோன்றுகின்றது.''

இவர்கள் பின்னால் நிகழ்த்திய ஆய்வுகளால் திவாகரர் காலம் 9-ஆம் நூற்றாண்டாதல் வேண்டும் எனக்'காவிய காலம்' நூலில் குறிப்பிட்டு உள்ளனர். 9ஆம் நூற்றாண்டளவில் தோன்றிய திவாகரம் என்னும் நிகண்டில் குறிக்கப்பெற்றுள்ளன (163பக்) என்று குறிப்பிட்டிருக்கிறார். திரு. மு. அருணாசலம் அவர்களும் திவாகரர் காலத்தை 9ஆம் நூற்றாண்டாகக் கொள்வர்.

**பிங்கலம்**

திவாகரத்தை அடுத்து 10-ஆம் நூற்றாண்டில் தோன்றிய பிங்கலம், பிங்கலந்தை என்னும் பெயராலும் வழங்கப் பெறும். திவாகர நிகண்டின் அடிப்படையில் இந்நூல் உருவாக்கப் பெற்றது என்பதனை ஆராயும்போது அறிய முடிகின்றது. 10 தொகுதிகளில் இந்நூலை ஆசிரியர் அமைத்துள்ளார். தொகைப்பெயர் விளக்கமான பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி தனிப்பட பிங்கலத்தில் இல்லை. மூன்றாவதான ஐயர் வகையில் முதல் 10 நூற்பாக்களே அத்தொகுதிப் பொருளுக்கு இயைபுடையவை ஏனையவையெல்லாம் ஒருமை, இருமை முதலிய பொருட்களை விளக்கும் தொகைப் பெயர் விளக்கமேயாகும்.

பிங்கலர் அமைத்த தொகுதிப் பிரிவு அமைப்பு ஒருவகைத் தனிமுறையாய் இருப்பினும் தெளிவான பகுப்பு முறையாகும். தெய்வப் பெயரை வான்வகை, வானவர்வகை என இரு தொகுதிகளாகப் பிங்கலர் கொள்வர். சிவன், திருமால் முதலிய தெய்வப் பெயர்களைத் தொகுத்துத்தருமிடத்து அவ்வக் கடவுளர் பற்றிய பிற செய்திகளையும் இணைத்துத் தந்திருப்பது பிங்கலத்தின் தனிச்சிறப்பாகும். இந்நூலின் முதற்பதிப்பு 1890ஆம் ஆண்டு வெளிவந்தது. சிவன் பிள்ளை என்பார் இதனை வெளியிட்டுள்ளார்.

**உரிச்சொல் நிகண்டு**

உரிச் சொல் நிகண்டு வெண்பா யாப்பினால் இயன்றது. உரிச்சொல் என்றே முதலில் வழங்கப் பெற்று இருக்கலாம். ஆசிரியர் காங்கேயர். இவர் கொங்கு நாட்டு மோரூரைச் சார்ந்தவர் எனக் கொங்கு மண்டல சதகம் கூறும்:

''அலைகடல் சூழும் அவனியில் செந்தமிழ் ஆய்பவர்கள்
நலனுறத்தக்க வகையாக உள்ளம் நனி மகிழ்ந்தே
இலகும் உரிச்சொல் நிகண்டு வெண்பாவின் இசைத்த கலை
வலாழிக் காங்கேயன் வாழும் மோரூர் கொங்குமண்டலமே.''
(கொ. சத. 91)

இந்நூலின் காலம் 14-ஆம் நூற்றாண்டு என்பர் மு. அருணாசலம்.

முன்னர் இருந்த நூல்களின் கருத்துக்களைச் சுருக்கித்தந்த நூல் எனப் பாம்பண கவுண்டன் குறவஞ்சிகூறும்.

வந்தனை காணல் வணங்கல் பணிதலே
தந்தலை தாழ்தல் சலாம் செய்தல்—முந்தித்
தொழுதலே தண்டன் தொடர்ந்து முயங்கல்
தழுவலே விள்ளல்எனச் சாற்று.

என்னும் பாடலில் 'சலாம் செய்தல்' என்னும் சொல் வருவது குறிப்பிடத் தக்கது. பன்னிரண்டு தொகுதிகளாகக் காணப் பெறினும் இந்நிகண்டு நூல் பல பதிப்புக்களைப் பெற்று விளங்கு கின்றது. முதல் பதிப்பு 1840-ல் புதுச்சேரி குவர்னமா அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றது.

**கயாதர நிகண்டு**

கயாதரர் இயற்றிய கயாதரம் 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. திவாகரர் தந்திருப்பதைப் போலவே ஒவ்வொரு தொகுதியின் முடிவிலும் வரலாற்றுக் குறிப்புக்கள் பொதிந்த பாடல்கள் உள. 'தேவை' என்னும் இராமேச்சுவரத்தில் வாழ்ந்தவர். தேவைக் கயாதரன், தேவையதிபன், தேவை நன்னாடன் எனத் தம்மைக் குறிப்பர். 11 தொகுதிகளைக் கொண்ட இந்நூல் 566 கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்டது. நூல் முழுமையும் அந்தாதித் தொடையால் அமைந்திருப்பது தனிச் சிறப்பாகும்.

முதன் முதலில் 1930ஆம் ஆண்டில் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் இந்நூலைப் பதிப்பித்தார். சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு. பல பெயர் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி இதில் இல்லை.

**பாரதி தீபம்**

திருக்கடம்பூர் திருவேங்கட பாரதியாரால் இயற்றப்பெற்ற இந்நிகண்டு நூல் 15 ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது ஆகும். கட்டளைக் கலித்துறைப் பாவினால் இயன்றது. வரலாற்றுப் பாடல்கள் பொதிந்த நூல். முழுமையாகத் திவாகரத்தைப் பின் பற்றி உரைக்கப் பெற்ற நூல். பெரும்பான்மையும் அடை மொழி அதிகமின்றிப் பெயர்களைத் தொகுத்து அமைத்துச் செய்யுட்களை இயற்றியுள்ளார். சில சொற்களின் மூல வடிவத்தை அறிந்து கொள்வதற்கு இந்நூல் துணைநிற்கின்றது. நண்டின் பெயர்களுள் ஒன்று 'களவன்' என்பது. இச்சொல்லைக் 'கள்வன்' என்று கொண்டது சரியன்று என்பது இதனால் தெளிவாகும் என்பர். தேவு என்பதுதான் கொளப் பொருட்டு

என்பதனைத் தெரிவிக்கும் உரிச்சொல் என்பதற்கும் "பாரதி தீபம்" சான்றாக அமைகின்றது.

இந்நூல் முதன் முதலில் 1980ஆம் ஆண்டு பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுச் சென்னைப் பல்கலைக்கழகம் வாயிலாக வெளியிடப்பெற்றது.

**சூடாமணி**

நிகண்டுகளுள் பெரிதும் போற்றிப் பயிலப்பெற்ற நூல் சூடாமணி நிகண்டாகும். சொற்பொருள்களை எளிதில் நினைவு கொள்வதற்குத்தக எளிமையாய் அமைந்துள்ளது இந்நூல். விருத்தப்பாவில் இந்நூல் அமைந்துள்ளது. மண்டல புருடர் என்பார் இதனை இயற்றினார். நிகண்டு சூடாமணி என்பதே இதற்கு முதன் முதலில் இட்ட பெயராகும். திவாகரத்தைப் போல் பன்னிரு தொகுதிகள் உடையது. 16ஆம் நூற்றாண்டினர் மண்டல புருடர்.

இந்நூலின் 11ஆம் தொகுதி ஒரு சொல் பல் பொருள் தொகுதி இக்கால அகராதி போன்று பயன்படும் ஒரு பகுதியாகும் எதுகை முறையில் அமைந்ததால் படிப்போருக்கு எளிமை யாயிற்று "பதினோராவது நிகண்டு" என்று தனிநூலாக உரை யுடன் பலர் வெளியிட்டுள்ளனர்.

தாண்டவராய முதலியார் முதன் முதலில் இந்நூலை வெளி யிட்டுள்ளார். பின்னர் ஆறுமுக நாவலர் பதிப்பித்து வெளியிட் டுள்ளார். (20க்கு மேற்பட்ட பதிப்புக்கள் இதற்கு உண்டு,) பதினோராம் நிகண்டு மட்டும் புதுவை நயநப்ப முதலியாரால் 1836இல் தனியாகப் பதிப்பித்த சிறப்பினை உடையது.

**அகராதி நிகண்டு**

திவாகரம், பிங்கலம் முதலிய பல நிகண்டுகளைப் பின் பற்றி எழுந்த இந்நூல் 1594 ஆம் ஆண்டில் இயற்றப்பெற்றதாக இந்நூலின் பாயிரப்பகுதி உணர்த்தும். ஒரு சொல் பல்பொருளை மட்டும் உணர்த்தும் இதனை இயற்றியவர் இரேவண சித்தர் ஆவார்நூற்பாவால் ஆக்கப்பெற்ற இந்நூல் அகரவர்க்கம் முதலாக வகரவர்க்கம் ஈறாகப் பத்துப் பகுதிகளாய் அமைந்துள்ளது. அகர நிரலைப் பின்பற்றிய நிகண்டும் இதுவேயாகும். முதலெழுத்தள வில் அகராதி முறை பின்பற்றப்பட்டுள்ளது. 'இரேவணாத்திரியர் சூத்திரம்' எனவும் "சூத்திர அகராதி" எனவும் இதற்கு வேறு பெயர்களும் உண்டு. சென்னையில் புலியூர்ப் பகுதியைச் சார்ந்தவர் இந்நூலாசிரியர் என்பது பாயிரப் பாடல்களால் புலனாகும்.

இந்நூலினைப் பதிப்பித்து வழங்கியவர் திரு. நாராயண ஐயங்கார் ஆவார். 1920ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச் சங்கத்து

செந்தமிழ்ப் பிரசுரமாக வெளிவந்துள்ளது. இப்பதிப்பின் முக வுரையில் அரிய செய்திகள் உள்ளன.

"இதன்கண் பிற நிகண்டிலுள்ள சொற்களும், பொருளும் பெரும்பாலும் காணப்படினும் அவற்றில் இல்லாத சங்க மருவிய சான்றோர் செய்யுட்களிலும் அவற்றின் உரைகளிலும், பிற் காலத் தமிழ் நூல்களிலும் வழங்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்களும் உலக வழக்கில் உள்ள வெளிப்படைச் சொற்களும் தெலுங்கு கன்னடம் முதலிய தமிழ் திரி பிறமொழித் திரிசொற்களும் ஆங்காங்கு செந்தமிழ் நாட்டுள் வழங்கும் திசைச் சொற்களும் மருவியும் திரிந்தும் வழங்கும் திசைச் சொற்களும் மருவியும் திரிந்தும் வழங்கும் வடசொற்களும் இடையேயிடையே மலிந்து கிடக்கின்றன." என்னும் குறிப்பால் நூற்பொருளின் அமைதி தெளிவாகும்.

## ஆசிரிய நிகண்டு

ஆண்டிப்புலவர் இயற்றிய ஆசிரிய நிகண்டு ஆசிரிய விருத் தத்தால் அமைந்தது. பொருள்களின் எண்ணிக்கையையும் எண் குறியீட்டால் ஆசிரியர் வெளிப்படுத்துவது நூலின் தனிச் சிறப் பாகும். "வேளம் பரவும் ஊற்றங்காற் பாவாடை வாத்தியார் மைந்தன் ஆண்டிப் புலவன்' எனப் பாயிரம் கூறும்.

தமக்கு முன் இருந்த நிகண்டுகளைப் பின் பற்றியே இந் நூலை அமைத்தார் என்பதையும் பாயிரப் பாடல்களால் காட்டுவர்.

முன்னுள திவாகரம் பிங்கல நிகண்டுசீர்
முந்துகாங் கேய னுரிச்சொல்
முறைபெறு கயாதரம் பகருமகராதியிவை
முற்று மொன்றாய்த் திரட்டி
இந்நிலந் தனிலுளோ ரெவரு மறியும்படிக்
கெண்ணி யாசிரியத்தினால்
இயம்பிய நிகண்டு

எனத் தமக்கு முன்பிருந்த நிகண்டுகளையும் கால நிரல் அமைப் பில் கூறுவது கருதத் தக்கது. 17ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது.

நூல் 11 தொகுதிகளைக் கொண்டது. முழுமையும் கிடைக்க வில்லை. கிடைத்த வரையில் முதல் எட்டுத் தொகுதிகளைத் திரு. வீ. சொக்கலிங்கம் 975-இல் பதிப்பித்துத் தஞ்சை சரசுவதி நூல் நிலைய வழி வெளியிட்டுள்ளார்.

## அரும் பொருள் விளக்க நிகண்டு

அருமருந்தைய தேசிகர் இயற்றிய இந்நூல் 700 விருத்தங் களை உடையது. இந்நூல் '763-ல் எழுதி முற்றுப் பெற்றது.

அகராதி நிகண்டினைப் பின்பற்றிப் பெரும்பாலும் அமைந்து உள்ளது. இந்நிகண்டில் பல கன்னடச் சொற்கள் சேர்க்கப் பெற்று உள்ளன.

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து வாயிலாக 1931-ஆம் ஆண்டில் வெளியிட்டார்கள்.

**பொதிகை நிகண்டு**

கல்லிடைக்குறிச்சியைச் சார்ந்த சாமிகவிராயர் இயற்றினார். இப்பொதிகை நிகண்டில் ஒரு பகுதி விருத்தப்பாவில் அமைந்துள்ளது. தெய்வப்பெயர் முதல் ஒரு சொற் பல்பொருட் பெயர் வரை 10 தொகுதிகள் கொண்டுள்ளது.

இரண்டாம் பகுதி அகராதி போன்ற அமைப்புடையது. அகர வர்க்கம் முதல் வகர வர்க்கம் ஈறாகப் பத்து வர்க்கங்களைக் கொண்டது. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் 1934ஆம் ஆண்டில் இந்நூலை வெளியிட்டுள்ளார்.

**நாமதீப நிகண்டு**

கல்லிடைக் குறிச்சி சிவசுப்ரமணியக் கவிராயர் (தந்தை : சாமி கவிராயர்) என்பார் இயற்றினார். வெண்பா யாப்பில் அமைந்துள்ளது. மொத்தம் 808 வெண்பாக்கள். பாயிரம் தவிர (8) ஏனைய 800 வெண்பாக்களும் பொருட் பெயர்கள் பற்றிக் கூறுகின்றன. [5] இந்நூலின் பொருள் புதியதொரு முறையில் அமைந்துள்ளது. இதனைப் பதிப்பாசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் மிக விளக்கமாக ஒரு வரைபடத்தின் மூலம் விளக்கியுள்ளார். (பக் 20 இல் காண்க)

பன்னீராயிரம் சொற்கள் பற்றி இந்நூல் கூறுகின்றது. இதனால் இந்நூலினை உருவாக்குதற்கு ஆசிரியர் மேற்கொண்ட முயற்சியும் உழைப்பும் நன்கு புலனாகும். 1930ஆம் ஆண்டில் இந்நூலினைப் பேராசிரியர் வையாபுரிபபிள்லள அவர்கள் பதிபபித்து வெளியிட்டார்.

**பொருட்டொகை நிகண்டு**

சுப்ரமணிய பாரதி இயற்றிய இந்நிகண்டு தொகைப் பெயர்களைத் தொகுத்துத் தருகின்றது. ஒருபொருள், இருபொருள் முதலியனவாக நூறு பொருள் வரையிலான தொகைப் பெயர் விளக்கம் நூற்பா யாப்பில் அமைந்துள்ளது நாமதீப நிகண்டின் பாயிரத்தில் சிவசுப்ரமணியக் கவிராயர் தாம் பாடிய இன்னொரு தொகை நிகண்டு குறித்துக் குறிப்பிடுகிறார். ஆனால் அது கிட்டவில்லை

---

5. 9-10, 11-ஆம் தொகுதிகளுக்கான சுவடி டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையத்தில் உள்ளது.



பொருள்
குணி
குணம்
உயர்திணை
அஃறிணை
உயிர்ப்பொருட் குணம்
உயிரில் பொருட் குணம்
தெய்வம்
மானிடம்
உயிர் பொருள்
உயிரில் பொருள்
மனம்
வாக்கு
செயல்
இயற்கை
செயற்கை
இடம்
காலம்
சினை
நாற்காலுயிர்
பறவை
ஊர்வன
நீர் வாழ்வன
தாவரம்

இந்நூலினை மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் வெளியிட்டுள்ளனர்.

**நாநார்த்த தீபிகை**

சூடாமணி நிகண்டினைப் பின்பற்றி எழுந்த நூல் நாநார்த்த தீபிகை நிகண்டு. ககர முதல் னகர ஈறாக எதுகை அமைப்பில் ஒருசொல் பலபொருளை விரித்துரைக்கின்றது. பல்வேறுவகையான விருத்தயாப்பில் அமைந்தது. 1102 விருத்தப் பாக்களில் 5452 சொற்களுக்குப் பொருள் விளக்கம் மொழிந்துள்ளது.

அடியொன்றில் இரண்டும் ஒன்றும்
ஆகஓர் தொடையிற் செய்யுள்
முடியஓர் சொல்நா நார்த்தம்
முறைநர மொழிகின் றேனால்.''

என்று பாயிரத்தில் தாம் மேற்கொண்ட நெறியையும் கூறுவார்.

ஆசிரியர் கவிராயர் முத்துசாமிப் பிள்ளை இந்நூலினை 'முன்னோர் பன்னூலில் சில வெவ்வேறுரைத்தவெல்லாம் சேர்த் தொன்றாத் திரட்டியோர் சொல் பலபொருள் எனும் நா நார்த்த தீபிகை பகரலுற்றாம்' என முன்னோர் மொழிந்த பொருள்களை உட்கொண்டு உருவாக்கினர் என்பார்.

இந்நூலினை 1936-ல் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் துறைத் தலைவராய் விளங்கிய சு. அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

**கந்த சுவாமியம்**

கீழ்வேளூர்ச் சுப்ரமணிய தீட்சிதர் இயற்றிய இந்நூல் நூற்பா யாப்பில் அமைந்துள்ளது. ஒருசொல் பல்பொருள் பற்றியது. 54 கட்டளைகளாகப் பாகுபடுத்தியுள்ளார். நூலாசிரியர் 1844 ஆம் ஆண்டில் முதலிரண்டு கட்டளைகளை வெளியிட்டுள்ளார். முதற்கட்டளையில் 1318 சொற்களும் இரண்டாவது கட்டளையில் 1425 சொற்களும் உள்ளன எனப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் தமிழ்ப் பேரகராதியின் முன்னுரையில் கூறுகின்றார்.

**தொகைப் பெயர் விளக்கம்**

களத்தூர் வேதகிரி முதலியார் இயற்றியது. பல்பொருள் கூட்டத்தொரு பெயர்த்தொகுதியாகியதொகைப்பெயர் பற்றி விளக்குவது. 1849-ல் இந்நூலினை ஆசிரியரே வெளியிட்டார்.

**இலக்கியத்திறவுகோல்**

தமிழ்ப் பேரகராதியின் முன்னுரையில் இந்நூல்பற்றிய குறிப்பு காணப்பெறுகின்றது. ஒருமை, இருமை, முதலிய எண்தொகை

களை விளக்கியமைத்த ஒரு சிறுநூல். தொகைப் பெயர்கள் அகராதியடைவில் முறைப்படுத்தப்பெற்றுள்ளன.

**சிந்தாமணி நிகண்டு**

பதினொராந் தொகுதி முறையில் அமைந்தது. 400 விருத்தங்களில் அமைந்த இந்நூலினை யாழ்ப்பாணம் வைத்தியலிங்கம் பிள்ளை என்பார் இயற்றினார்.

> நேர்செறி இளைஞ ரோர் சொற் கொருபொருணோரா யோரப்
> பார்செறி நிகண்டு சிந்தா மணியெனப் பகர்வ னொன்றே

என ஆசிரியர் உரைப்பதால் இந்நூல் ஒரு சொல் ஒரு பொருள் உரைக்கும் நூல் என்றறியலாம். 1874-ல் அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

**அபிதானந் தனிச் செய்யுள் நிகண்டு**

"கோபால்சாமி நாயக்கர் இயற்றிய இந்நூலில் பல்வேறு வகையான பாவகைகள் உண்டு. இந்நூலின் முதல் தொகுதி 1878 இல் வெளியிடப்பெற்றது. தமிழ்ப் பேரகராதியின் முன்னுரையில் இந்நூல் பற்றிய செய்திகள் தரப்பெற்றுள்ளன.

**தமிழ் உரிச் சொற் பனுவல்**

கவிராச பண்டித இராம சுப்ரமணிய நாவலர் இயற்றிய இந்நூல் தமிழ்ச் சொற்களை மட்டுமே தந்துள்ளது. நூற்பா யாப்பில் அமைந்துள்ளது.

> "பயன்மிகு முரிச்சொல் பகர்நூல் பலவு
> நயமுறத் தேர்ந்து நல்வகை நாடிப்
> பிறமொழிச் சொற்களை நெறிப்பட நீக்கித்
> தமிழுரிச் சொற்களின் தகுபொருள் விளங்கப்
> பைந்தமி ழுரிச்சொற் பனுவல் தந்தனன்
> முதிர்புல மொளிர்மான் முருக நாவலனே."

என்னும் பாயிரப் பாடலால் ஆசிரியரின் நோக்கம் நன்கு தெளிவாகும்.

இந்நூல் பத்துத் தொகுதிகளைக் கொண்டது. நூலின் பொது அமைப்பு, தொகுதிப் பெயர்கள் முதலாயின திவாகரத்தை ஒத்துள்ளன. தொகைப்பெயர் விளக்கமாகத் திவாகரம் முதலியவற்றில் காணப்படும். இறுதித் தொகுதியில் இடம் பெற்ற பொருள்கள் பிங்கலத்தில் கூறப்பட்டவாறு தொடர்புபடுத்தி விளக்கப் பெற்றுள்ளன. பல்பொருட் பெயர் என்னும் தொகுதியில் செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியும் அடங்கியுள்ளது. ஒருசொல் பல்பொருள் விளக்கம் அகராதி நிகண்டினைப் போல அகர வரிசையில் அமைந்துள்ளது. தமிழ்மொழி வளர்ந்த நிலையில் ஆக்கப் பெற்ற இந்நூல் தனிச் சிறப்புடையது ஆகும்.

## பல்பொருள் சூளாமணி

ஈசுர பாரதியார் என்பார் இயற்றியது. இவருடைய தந்தை பெயர் மடைச் சிதம்பர பாரதி என்பது. மடை என்பது ஸ்ரீவில் லிப்புத்தூரை அடுத்த மடவார் வளாகம் என்னும் ஊராகும். கி பி. 1700ஆம் ஆண்டு ஈசுரபாரதியார் இந்நூலை இயற்றினார்.

„கொல்லமெண் ணூற் றெழுபத்தாறெனக்
கணிதப் பாவாணர் குறித்த ஆண்டின்
மல்குபுகழ் விக்கிரம வருடத்தா வணி மூல
வளஞ்சேர் நாளில்
நெல்லைநகர் வடிவுதந்த வேய் முத்தைப் பணிந்துலகில்
நெடுநாள் நிற்கப்
பல்பொருட் சூடாமணியை ஈசுரபா ரதிதமிழால்
பாடி னானே.

எனவரும் பாயிரச் செய்யுள் இதற்குத் தக்க சான்றாம்.

இவர் 'அமரகோசம்' என்னும் வடநூலைப் பின்பற்றி மூன்று காண்டங்களாகப் பகுத்துள்ளார். அவையாவன: ஒருபெயர் ஒரு பொருள் உரைக்கும் காண்டம், ஒருபொருள் பல்பெயர் ஓதும் காண்டம், பல்பெயர் கூட்டத்து ஒரு பொருள் காண்டம்.

'வடமலைநிகண்டு' என்னும் பெயரில் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் நூல்நிலையத்தில் இது இரண்டாம் காண் டம் மட்டும் உள்ள சுவடி. இதனை டாக்டர் இரா. நாகசாமியும், வித்வான் சு. பாலசாரநாதனும் 1933-ல் பதிப்பித்து அந்நூல் நிலையவழி வெளியிட்டுள்ளனர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை தொகுத்த சுவடியில் முதல் இரு காண்டங்கள் உள என்றும், மூன் றாம் காண்டம் இல்லை என்றும் தெரியவருகிறது. எனவே இந் நிகண்டில் முதற்காண்டமும் இனி வெளிவரவேண்டும்.

டாக்டர் இரா. நாகசாமி தமது முன்னுரையில் ஈசுரபாரதி யார் 'பல்பொருள் சூடாமணி' என்னும் பெயரில் நூல் செய்தார் என்றும், பின் அதனைச் சற்று விரிவுபடுத்திப் புதுக்கித் தமக்கு உதவிய இறையூர் வடமலை குடும்பத்தினர் நினைவாக 'வட மலைநிகண்டு' எனப்பெயரிட்டு இருக்க வேண்டும் என்றும் குறித்துள்ளார். கல்கத்தா தேசிய நூலகத்தில் உள்ள 'பல்பொருள் சூடாமணிச்' சுவடியுடன் ஒப்பு நோக்கினால் மேலும் பல குறிப்புகள் கிட்டுதல் கூடும்.

## கைலாச நிகண்டு சூடாமணி

அச்சில் வராத நிகண்டுகளும் இந்நூலும் ஒன்றாகும். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் சுவடித் தொகுப்புகளில் இதுவும் ஒன்று. இது திவாகரம், பிங்கலந்தை போல நூற்பா யாப்பி னால் அமைந்தது. இந்நூல் பிங்கலந்தையின் வழிப்பட்டது என்

பது விண்ணவர்வகை, விண்ணின்வகை, மண்ணின்வகை எனத் தொடங்கிச் சென்று ஊர்வன இறுதியாக வரும் 49 பகுப்புக்களாலும், இறுதியில் ஒரு சொல் பல்பொருட் பெயர்களை வைத்திருக்கும் முறைமையாலும், அறியப்படும் என்கிறார் பேரா. வையாபுரிப் பிள்ளை. திருமேனி இரத்தின கவிராயர் வீட்டிலிருந்து கிடைத்த இந்நூல் 350 ஆண்டுப் பழமையானதாகும். இதனை இயற்றியவர் சைவர் என்றும், கைலாசம் என்னும் பெயரினையுடையார் என்றும் ஊகிக்கலாம். இந் நிகண்டின் தொடக்கமான தெய்வப் பெயரின் முதற்பகுதி, சக்தி என்னும் பத்திரிகையில் (1944?) வையாபுரிப்பிள்ளையால் வெளியிடப் பெற்றது. இதில் பூராட நட்சத்திரத்தின் பெயர் வரை 122 நூற்பாக்கள் அச்சில் வந்துள்ளன. எனினும் தொடர்ந்து இந்நூல் அப்பத்திரிகை வழியும் அச்சிடப் பெறவில்லை.

### அபிதான மணிமாலை

அபிதானம் என்னும் சொல்லுக்குப் பெயர் என்பது பொருள். தெய்வப்பெயர்; மக்கட்பெயர் முதலிய பல்வேறு பெயர்களின் பொருள் விளக்கத்துடன் தரப்பட்டுள்ளன. எனவே இது அபிதான மணிமாலை என்று பெயர் பெறுவதாயிற்று.

இந்நூல் திவாகரத்தைப் போன்ற அமைப்புடையது. நூற்பாவால் இயன்றது. பன்னிரண்டு தொகுதிகள் இருக்க வேண்டிய இந்நூலில்9 தொகுதிகள் வரை கிட்டியுள்ளது. அதிலும் எட்டாவது தொகுதியில்லை. இது பண்பு பற்றிய பெயராக இருத்தல் வேண்டும். இந்தக்குறைப்பிரதியில் கிட்டிய வரையில் 2404 நூற்பாக்கள் இடம் பெற்று உள்ளன.

இந்நூலின் ஆசிரியர் திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை. இவரைத் திருச்சிற்றம்பலத்து இன்னமுதம் பிள்ளை என்றும் குறிப்பிடுவர். மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை காலத்து இவர் மயிலாப்பூரிலுள்ள திருவண்ணாமலை மடத்தில் இருந்தார். இவர் திருநெல்வேலி அம்பலக்காரருடைய மாணக்கருள் ஒருவர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார், திருக்குறள் பரிமேலழகர் உரை முதலியவற்றிலுள்ள ஐயங்களை இவர்பால் கேட்டுத் தெரிந்தனர் என்று தெரிய வருகிறது. பிள்ளையவர்கள் பாடிய அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழுக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். இவரும் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரும் எழும்பூர்த்திருவேங்கடாசல முதலியாரும் அடிக்கடி அளவளாவி மகிழ்ந்து தமிழின்பம் நுகர்ந்தனர் என்று தெரிய வருகிறது. வடமொழியிலும் இவர் வல்லவராயிருந்தார்.

இந்நூலை வித்துவான் சு. பாலசாரநாதனார் பதிப்பித்து 1988 இல் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூல்நிலையத்தின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

**தொகை அகராதி**

தொகைச் சொற்களுக்கு உரைநடையில் விளக்கம் தருவது. இதனை இயற்றியவர் பெயர் முதலியன தெரியவில்லை. இது ஒரு குறைப்பிரதியே. மூன்று முதலாக முப்பத்திரண்டு வரையி லான எண்தொகைப் பெயர் விளக்கம் உள்ளது. சிதைந்த நிலை யில் இருந்த இந்நூற் சுவடியைப் பரிசோதித்துத் தாம் பதிப்பித்த அபிதான மணிமாலையின் பிற்சேர்க்கையாக எட்டுப்பக்கங்களில் அச்சிட்டுத் தந்துள்ளார்.

**அகராதி மோனைக்ககராதி எதுகை**

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களின் தொகுப்பில் உள்ள இந்நூல் இன்னும் அச்சில் வெளிவராதது ஆகும். ஒருசொல் பல்பொருள் உணர்த்தும் இந்நூல் கல்கத்தா தேசிய நூலகத்தில் உள்ளது.

**நவமணிக்காரிகை நிகண்டு**

சோழவந்தான் அரசஞ்சண்முகனரால் கட்டளைக் கலித் துறைச் செய்யுளால் ஆக்கப்பெற்றது. ஒன்பது தொகுதிகளாக அமையவிருந்ததாகத் தெரிய வருகின்றது. முற்றும் கிடைக்க வில்லை. இன்னும் அச்சில் வெளிவரவில்லை. தெய்வப்பெயர்த் தொகுதி மட்டும் 122 செய்யுட்களில் உள்ளதாகத் தெரிகிறது.

**விரிவு நிகண்டு**

அச்சில் வராத இந்நூலினை வீரவநல்லூர் நா. அருணாசல முதலியார் அவர்கள் இயற்றி உரையும் எழுதியுள்ளார். ஒருசொல் பல்பொருள் விளக்கும் நூல். விரிவு நிகண்டு சூடாமணி நிகண் டின் ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பெற்றது. பலவழக்குச் சொற்களும், பொருள்களும் அமைந்து இந்நூல் மிக விரிவாக உள்ளது.

பொன் பொலி வீரை வேணிப் பூமிநாதன்றன் றாசன்
முன்புறு நிகண்டோ டேனை முதுமொழிப் பொருள னேகம்
இன்புறு மெதுகையாக வியற்றுமிந் நிகண்டை மேலோர்
அன்பமை கருத்துட் கொள்ள வருள்செ யையங்கர மாதேவே

என்னும் காப்புச் செய்யுளால் அறியலாம். 1100 செய்யுட்கு மேல் அமைந்துள்ளது. திருநெல்வேலிப் பகுதியில் உள்ள வழக்குச்சொற் கள் இந்நூலில் மிகுதியாக அமைந்துள்ளன. அச்சிடப்பெற வேண் டிய நிகண்டு நூலாகும்.

**அகராதி நிகண்டு**

இதுவரை அச்சில் வராத இரண்டு நிகண்டுச் சுவடிகள் டாக்டர்.உ.வே சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ளன. அவற்றுள் ஒன்று அகராதி நிகண்டு. மற்றொன்று சொற்சேர்வை பொருட் சேர்வை.

அகராதி நிகண்டு என்னும் பெயரில் சிதம்பரம் இரேவண சித்தர் செய்த நூலினும் வேறுபட்டது இந்நூல். அகரவரிசையில் ஓரடிச்செய்யுளால் 1312 அடிகள் கொண்டது. ஒவ்வொருசெய்யுளின் ஈற்றிலும் பொருள் எண்ணிக்கை தொகுக்கப்பட்டுள்ளது.

**சொற் சேர்க்கை பொருள் சேர்க்கை**

இந்நூலில் கடவுளர் முதல் பாடல் வரையுள்ள 10 தலைப்புகளில் நூல் அமைகின்றது. அகரவரிசையில் அமைந்த 3441 ஒற்றை வரிசைகள் காணப்படுகின்றன. சுவடியின் சிதைவால் இதன் ஆசிரியர் பெயர் முதலியன அறியமுடியவில்லை.

**பிற நிகண்டுகள்**

மருத்துவம், சோதிடம் முதலான பல்துறைகளிலும் நிகண்டுகள் தோன்றியுள்ளன. அகத்தியரின் நூலாகக்கொள்ளப் பெறும் 'ஏமதத்துவம்' என்னும் பஞ்ச காவிய நிகண்டு, சோதிட நூல்களான காலநிகண்டு என்பனவும் இவ்வகையில் கருதத்தக்கன.

## திவாகரம்-நூல் அமைப்பு

**பன்னிரு தொகுதிகள்**

திவாகரத்தைப் பன்னிரு தொகுதிகளாகப் பகுத்துள்ளார். இவற்றின் விவரம் வருமாறு:

1. தெய்வப் பெயர்த் தொகுதி
2. மக்கட் பெயர்த் தொகுதி
3. விலங்கின் பெயர்த் தொகுதி
4. மரப்பெயர்த் தொகுதி
5. இடப் பெயர்த் தொகுதி
6. பல்பொருட் பெயர்த் தொகுதி
7. செயற்கை வடிவின் பெயர்த் தொகுதி
8. பண்பு பற்றிய பெயர்த் தொகுதி
9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி
10. ஒலிபற்றிய பெயர்த் தொகுதி
11. ஒரு சொற் பல் பொருட் பெயர்த் தொகுதி
12. பல் பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி

திவாகரத்திற்குப் பின்னர்த் தோன்றிய பல்வேறு நிகண்டுகளும் பெரும்பாலும் இவ்வமைப்பையே மேற்கொண்டு

அமைந்துள்ளன. எனவே திவாகரர் அமைத்துக் கொண்ட அமைப்பு முறையின் பெருமை இனிது விளங்கும். பிற்காலத்தே காலப்போக்கிற்கேற்பச் சிற்சிறு மாற்றங்களை மேற்கொண்டன ரேயன்றித் தொகுப்பின் அமைப்பு மாறவேயில்லை எனலாம்.

பொதுவாகத் திவாகர நிகண்டு எடுத்துக் கொண்ட பொருள்களை மூவகை நிலையில் தொகுத்துரைக்கின்றது. (1) ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி (2) ஒருசொல் பல்பொருள் பெயர்த்தொகுதி(3)பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி. இவற்றுள் இரண்டாவது பகுதி இன்று நாம் காணும் அகராதி நெறியாகும். இனி இத் திவாகர நிகண்டுகள் அமைந்துள்ள பன்னிருதொகுதிகளின் பொருள் நிலையையும் அமைப்பு முறையையும் காணலாம்.

## 1. தெய்வப் பெயர்த் தொகுதி

திவாகர நிகண்டின் முதல் தொகுதி தெய்வப் பெயர்த் தொகுதியாகும். அருகன் தொடங்கி காமன் காண்டம் ஈறாகத் தரப்பட்டுள்ள இம்முதல் தொகுதி 159 நூற்பாக்களைக் கொண்ட தாகும்.

முதலில் அருகனுக்குரிய பெயர்கள் தரப்பட்டுள்ளன. 'இவை முதலாய் அருகற்கு இன்னம் அனந்தம் பெயரே' என்று நூற்பா முடிவதால் இன்னும் பல்வேறு பெயர்களும் அமைந்திருக் கக்கூடும் என்பது தெளிவாகும். இத்தொகுதியில் கூறப்பட்டுள்ள செய்திகள் அனைத்தையும் தொகுத்துப் பார்க்கும் போது தெய்வநிலையில் பலவற்றையும் கொண்ட பான்மை புலனாகும். இத்தொகுதியில் தரும் தெய்வத்தின் பெயர்களும் அவற்றின் முறையும் எண்ணிக்கையும் வருமாறு: அருகன் 43; சிவன் 64; திருமால் 38; பிரமன் 27; இந்திரன் 2'; கணபதி 9; முருகன் 26; காமன் 14; வயிரன் 2; ஐயனார் 4; வயிச்சிரவணன் 13; புத்தன் 26, நமன் 11; காலன் 4, உமையவள் 8; கங்கை 6; காடுகாள் 7; திருமகள் 12; சரசுவதி 16; சேட்டை 8; இந்திராணி 4; பத்திர காளி 14; பகவதி 22; இடாகினி 3; யோகினி 2; அமரமாதர் 2; இவற்றுள் சிவனுக்குரிய பெயர்களே மிகுதி.

தெய்வப் பெயர்களுக்கு அடுத்த நிலையில் தேவர், கடவு ளர், பொதுப்பெயர், அரக்கர், பூதங்கள், ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், வருணன், சூரியன், சந்திரன், செவ்வாய் முதலிய கோள்கள், வாரத்தின் பெயர்கள், இராசியின் பெயர்கள், நட்சத் திரப் பெயர்கள், நேரத்தைச் சுட்டும் பெயர், பருவத்தின் பெயர், மழை, மேகம், இடி, மின்னல் முதலானவற்றையும் தொகுத்து ரைக்கின்றார்.

பெருந்தெய்வங்கள் முதலிலும் அதனையடுத்துச்சிறுதெய்வங்களும் பின்னர் பெண் தெய்வங்களும் என முறைவைக்கப் பெற்றுள்ளன. திவாகரத் தெய்வப் பெயர்த் தொகுதியுள் சுட்டப் பெறும் பதினொரு பெயர்கள்[1] பின்வந்த நிகண்டுகள் எதிலும் இடம்பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

## 2. மக்கட் பெயர்த் தொகுதி

இரண்டாம் தொகுதியான இத்தொகுதியுள் மொத்தம் 351 நூற்பாக்கள் உள்ளன. அருந்தவர், சைவ தவப் பாலோர் தொடங்கி, பிறசமயத்தவர் பெயர், கலைவல்லோர், அறிவுடையோர் எனப் பாகுபடுத்தி உரைப்பார். சிறந்த சொல்லாட்சி கலைத் தொகுத்துப் பேணிய மரபு இவர்தம் தொகுதிகளால் புலனாகும் அறிவுடையோர் பெயர்களாகச் சான்றோர், மிக்கோர், நல்லவர், மேலவர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, ஆன்றோர் எனக் கூறுவதும் கருதத்தக்கது.

அடிகள், அத்தன், அய்யன், ஆசான், குரவன், சாமி, கோமான், பெருமான், உரவோன், ஈசன், இறைவன், பதி, நாதன் என்பன மூத்தோனுக்குரிய வேறு பெயர்கள் எனச் சுட்டும் போது மன்னர் பெயர்களின் மரபு நெறியையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

வேளாளர்க்கு மண்மகள் புதல்வர், வார்த்தைத் தொழிலோர் ஏரின் வாழ்நர் (193) எனச் சுட்டுப் பெயர்கள் இனிய தமிழில் அமைந்தவையாகும். செட்டிகள் பெயர்களுள் ஒன்றாக 'ஏர்த்தொழிலர்' பெயரையும் சுட்டுவது (192) உளங்கொளத்தக்கது. 'யவனர்' என்னும் பெயர் (200) கண்ணாளருக்குரிய பெயராக விளங்குவதையும் காட்டுவார். கள்வினைஞர் (211) எனக் கள்ளின் தொழிலாளரைச் சுட்டுவார். ஊன் வினைஞர் (207) என்று சுட்டுவதும் காண்க.

தூதருக்குரிய பெயர்களாகச் சுட்டுவது (227) அவர்தம் பண்புகளை உரைப்பதாகவே கொள்ள முடிகிறது. 'வினையுரைப்பாரும், வழியுரைப்பாரும், (அனைய) பண்புரைப்பாரும் தூதர்' என்பர். 'நகரப்பதி வாழ்நரை' நாகரிகர் (247) எனக் கொள்வதும் கருதத்தக்கது. கைம்மையில் பெறும் புதல்வனைக்கோளகன் (255) எனச் சுட்டுவார். கன்னியில் பெறும் புதல்வரைக் 'கானீனன்' (256) என்பார்.

தரியலர், தெவ்வர், மேவலர், செறுநர், கருதலர், சேரலர், இரிஞர், ஒன்னார், ஒல்லார், அரிகள், நள்ளார், அமரார், ஒட்டார், போற்றார், நேரார், ஒட்டலர், நேரலர், இகலோர், எதிர்ந்தோர்,

---

1 அப்பன், அமலன், அறிவன், ஆதியங்கடவுள், கடவுள் மூர்த்தி, காமற்காய்ந்தோன், தத்துவன், முதல்வன், முழுதொருங்கு உணர்ந்தோன், மூர்த்தி.

விட்டலர், மாற்றலர், முனைந்தோர், என 23 பெயர்களையும் பகைவர்க்குச் சுட்டுவார். புறப்பொருள் வெண்பா மாலையில் இத்தகு பெயர்கள் பலவும் வருவது கருதத்தக்கது.

அரசர், அரசருக்குரிய பரிவாரங்கள், தொழிலாளர், கீழ்மக்கள், பெண்டிர், நிலத்திற்குரியோர் பெயர், உறவுப் பெயர், படை வகுப்பின் பெயர் என வகைப்படுத்துவார். மாந்தர் என்பதை மக்களான் பொதுப் பெயர் என்று சுட்டுகின்றார். உடலுறுப்புகள் பெயர் மிகுதியாய் உள. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஐந்தையும் புலனறி கருவி என்பார் (150)

சமயத் தலைவர் பெயர், சிறந்தோர் பெயர், தொழில் வல்லுநர் பெயர், அரசர், மந்திரி, முதலாய பரிவாரங்கள், தொழிலாளர் பெயர், உறவுப் பெயர், மகளிர் பெயர், நிலமக்கள் பெயர், உறுப்புகள் எனப் பெருந்தலைப்புகளில் இவர் கூறியுள்ள 250 பெயர்த் தலைப்புகளையும் அடக்கலாம்.

### 3. விலங்கின் பெயர்த் தொகுதி

இத்தொகுதியுள் 216 பெயர்கள் தரப்பட்டுள்ளன. தொல்காப்பிய மரபியலைத் தழுவி இங்கு விலங்கின் பெயர்த் தொகுதியை அமைத்திருக்கின்றார் எனலாம். சிங்கம், புலி, யானை, குதிரை, பசு, எருமை, யாடு, கழுதை, பன்றி, முயல், குரங்கு, நாய், ஒந்தி, எலி, ஒருத்தல், ஆண் விலங்கு, பெண்விலங்கு, குழவிப் பெயர், விலங்குகளின் உறுப்புகளின் பெயர் என விலங்கின் வகைகளைக் கூறுகின்றார். பின்னர், பறவைகளின் பெயர்களையும், மீன், சங்கு ஆமை, தவளை ஆகியவற்றின் பெயர்களையும் கூறுகின்றார். விலங்கு, பறப்பன, ஊர்வன, எனப் பாகுபடுத்தியமை இதனால் நன்கு தெளிவாகும்.

யானைக்கு மட்டும் பதின்மூன்றிற்கும் மேற்பட்ட நூற்பாக்களில் விளக்கம் அளித்துள்ளார். அறுகு, புழைக்கை, யாளி என்பன யானை யாளியின் பெயர்கள், எனக் குறிக்கின்றார் (413) யானைக்குரிய வேறு பெயர்களாக 38 பெயர்களைக் குறிப்பார். தும்பி, கடிவை, புகர்முகம், தோல், கரி, உம்பல், வயமா, பகடு, நால்வாய், கரிணி, குஞ்சரம், கயம், களபம், மருண்மா, தந்தி, மாதங்கம், ஒருத்தல், களிறு, சிந்துரம், கறையடி, எறும்பி, வழுவை, வாரணம், வேழம், வல்விலங்கு, நாகம், மதகயம், அத்தி இபம், கும்பி, போதகம், உவா, தூங்கல், மாதிரம், கைம்மா, ஆம்பல், கோட்டுமா, புழைக்கை என்பன யானைக்குரிய பெயர்களாம்.

யானை பிறந்த நிலத்தையொட்டிக் கிரிசரயானை, வனசரயானை, நதிசரயானை (418) எனப்பிரிப்பது வியப்பாயுள்ளது.

மதகரியும் தந்தியும் களிறு என்றும், கரேணு என்பது பிடியானை என்றும், போதகம், துடியடி, கயமுனி என்பன யானைக் கன்று கள் என்றும் கூறுகின்றார். கன்னமதம், கோசமதம், கைம்மதம் யானைக்குரிய மூன்று மதங்களாகும்.

குதிரைக்குரிய பெயர்களாக 25 கூறிவிட்டு, பாண்டியன் குதிரைக்குக் கனவட்டம் என்றும், சேரன் குதிரைக்குப் பாடலம் என்றும், சோழன் குதிரைக்குக் கோரம் என்றும், குறுநில மன்னர் குதிரைக்குக் கந்தகம் என்றும் பாதுபடுத்திப் பேசுவது அக்கால வழக்கத்தையும் விலங்கியல் நுட்பத்தையும் காட்டும். குதிரை செல் வழியை 'மாதிகம்' என்று கூறுவார். (426)

பசுவின் பொதுப்பெயரை முன்னர் கூறிப் பின் பசுவின் பெண் பாற் பெயர், பசுவின் ஆண்பாற் பெயர் எனப் பகுத்துள்ளார். குடஞ்சுட்டு (427) என்பது பசுவின் பொதுப் பெயர்களுள் ஒன்று. மலட்டெருமைக்கு 'மைம்மை' (433) என்பது பெயராகத் தோற்றுகின்றது.

பூனையின் வேறுபெயர்களாக விலாளம், பவனம், வெருகு, விடருகம், பூசை, பாக்கன், மார்ச்சாலம் என்பனவற்றைக் குறிக் கின்றார் (454). விலாளன், கடுவன், வெருகு என்பன ஆண் பூனைக்குரிய பெயர்களாகும். பச்சோந்திக்குரிய பெயர் காமரூபி (463) என்பதாம். கோடுவாழ் விலங்கின் பிள்ளைப் பெயர் (508) களாகக் குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பு, குரங்கு முதலாயினவற்றைக் கொள்வர்.

யானையின் செவிக்குக் கன்னதாலம், யானையின் முது கிற்கு மஞ்சு, யானையின் வாலிற்குத் தாலவட்டம், கவுட் சுவட் டிற்குக் கரடம், யானைக் காலிற்குக் காத்திரம், அங்கிதம், தாள், யானையின் உமிழ்நீருக்கு விலாழி, (குதிரையின் உமிழ்நீருக்கும் விலாழியே) என யானையின் பல்வேறு செய்திகளையும், திவா கரர் தொகுத்துத் தருவது அக்கால மக்கள் யானை குறித்த பழக்கவழக்கங்களை நன்கு அறிந்து வைத்திருந்தனர் என்பதைக்காட்டும்.

பல்வேறு வகைப்பட்ட பறவைகளின் பெயர்களையும் சுட்டிச் செல்லும் திவாகரர் இன்று காணக்கிடைக்காத அரிய பறவை களையும் பற்றிக் கூறுகின்றார். வானம்பாடி, கேகயப்புள், மீன் எறி சிறுபறவை, சக்கரவாகப்புள் எனப் பறவையினங்களைக் கூறுகின்றார். அடுத்து வண்டினங்கள் சிறிய பூச்சிகள் எனப் பல வற்றையும், இன்று நாம் கொசு எனப்படுவது அன்றைய வழக்கில் கொதுகு என்றிருந்ததும் அதற்குரிய வேறு பெயர் மசகம்என்பதும் தெரிய வருகின்றன.

சுறாமீன், இறால்மீன், கெளிற்றுமீன் எனப் பல்வேறு வகை மீன்களும் உண்டு. திமிங்கலம், விழுங்கும் மீன், என்பார். யானையை விழுங்கும் திமிங்கலத்தையே விழுங்கிடும் இன்னொரு மீன் பற்றிய செய்தியும் உண்டு. அதன் பெயர் திமிங்கிலகிலம் என்பதாகும். சங்குகளுள், வலம்புரிச் சங்கு, சலஞ்சலச்சங்கு, பாஞ்சசன்னியம் என்னும் வகை உண்டு.

இங்ஙனம் பல்வேறு இலக்கிய ஆட்சிகள் வழக்காற்றுச் சொற்கள் முதலான பலவற்றிலும் தொகுத்த அரிய செய்திக்குறிப்புகள் திவாகரத்துள் காணக்கிடக்கின்றன.

## 4. மரப்பெயர்த் தொகுதி

பஞ்ச தருவிலிருந்து தொடங்கித் தொடையல் மாலை ஈறாக சுமார் 216 மரப்பெயர்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பஞ்சதருவிற்கு அடுத்து முதலில் சந்தனத்தைக் கூறுகின்றார். பின்னர் அகில், மராமரம், மகிழமரம், தேக்கு, செண்பகம், ஆல், அரசு, அசோகு, இரத்தி, மருது, கொன்னை, குரா, நாவல், வேம்பு, அத்தி, புளிமா, தேமா, இருப்பை, கோங்கு, பச்சிலைமரம், வன்னி, கருங்காலி, எட்டி, புன்னை, ஆத்தி, இலவமரம், தேற்று, வல்லுவம், வேங்கை, கடம்பு பலா எனப் பல்வேறு மரத்தின் பெயர்களைச் (79மரங்கள்) சுட்டுகின்றார்.

மூங்கிலுக்கு மட்டும் 54 பெயர்களைக் கூறுகின்றார். காம்பு, திரிகண், வேழம், சந்தி, தூம்பு, முளை, வெதிர், விண்டு, வேரல் முந்தூழ், தட்டை, கீசகம், வேய், பணை, அம்பு, வரை வேணு, கழை, அமை, ஓங்கல், திகிரி, கிளை, கண், பாண்டில், என மூங்கிலின் பல்வேறு பெயர்களைச் சுட்டுவதால் மூங்கிலின் பயன்பாடு நன்கு புலனாகிறது.

பூவாது காய்க்கும் மரத்தினைக் கோளி என்னும் பெயரால் சுட்டுவர். சண்பகமும் வேங்கையும் வண்டு உணா மலர் மரம் என்பார். மரத்தின் பொதுப்பெயர்களாகப் பாகவதம், தாரு, தரு, தாவரம், மூலம் என்பனவற்றைக் கொள்வர். பொதும்பர் என்பது மரச்செறிவு என்றும், கோடரம் என்பது மரப்பொதும்பு என்றும் அறியமுடிகின்றது.

நந்தவனத்திற்கு ''வண்டு இமிர் நந்தவனம்'' என்று அடைமொழி கூறி அவற்றிற்குரிய பெயர்களாகத் தேம்பொழில் மரக்கா, தோட்டம், துடவை, உய்யானம், சோலை, வனம், உத்தியானம், தண்டலை, கானம், அடவி, எனப் பதினொன்றினைக் காட்டுவர். எனவே நந்தவனம் அக்கால மக்கள் விரும்பி மகிழ்ந்த இடமாகத் துலங்குகின்றது. நகரத்தை இன்று பூங்காக்களால் அழகுபடுத்த விரும்பினும் எந்த அளவில் அதனைப் போற்றிப் பாதுகாக்கின்றார்கள் என்பதனை அன்றிருந்த நிலையோடு ஒப்பிட்டுப்பார்த்தால் துயரமே மேவிடும். இயற்கையோடுஇயைந்த

சூழலையும், செயற்கையாகவேனும் இயற்கைச் சூழலை ஏற்படுத்த வேண்டுமெனும் அக்காலத்திய மக்களின் விருப்ப உணர்வும் இதனால் நன்கு போதரும்.

காயம்பட்டதைப் போக்கிப் புண்ணாற்றும் மருந்தாக '(வி) சல்லிய கரணி'யைக் குறிப்பர்.

''தைத்த அத்திரம் சத்திரம் தணிக்கும்
மெய்த்த நல் மருந்தே (வி) சல்லியகரணி (729)''

என்னும் நூற்பா இதனைக் காட்டும். அவ்வாறே துண்டம் ஆன உறுப்பினை மருந்துக்குப் பயன்படும் 'சந்தான கரணி'யைக் குறிக்கின்றார். தழும்புகளைப் போக்கும் சமனியகரணி, உயிர் தரும் மருந்தாகிய 'மிருத சஞ்சீவினி' முதலியவற்றைக் குறிக்கும் போது பழந்தமிழர் தம் தாவரவியல் மருந்தறிவும் புலனாகும்.

இவைகளுக்குரிய பெயர்களாகப் பத்திரம், ஓலை, பாசடை, தண்ணடை சாதை, தமாலம், தழை, பாசிலை, அடை பன்னம், என்பனவற்றைக் (736) குறிக்கின்றார். மலைநெல், குளநெல், செந்நெல் செய்ந்நெல், என நெல்லியின் பல்வேறுவகைகளையும் சுட்டுகின்றார். கோற்கொடி, கற்பகஞ்சேர் கொடி, மென்கொடி எனக்கொடி வகைகளைச்சுட்டி, அவற்றின் பெயர்களைக் குறிப்பர்.

வெற்றிலையின் வேறுபெயர் நாகவல்லி என்பர். தாமரைக்குரிய 21 பெயர்களையும் தொகுத்துத் தரும்போது வியப்பு மேலிடுகின்றது. புண்டரிகம், நளினம், பதுமம், சரோருகம், முண்டகம், அம்போருகம், அரவிந்தம், பங்கயம் அம்புசம், வாரிசம், கலசம், கஞ்சம், வனசம், கோகனகம், கமலம், அம்புயம், முளரி, திருமால், கொப்பூழ், திருமலர், இண்டை, சதபத்திரி என்பன தாமரைக்குரிய பெயர்களாகும்.

கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்பூ, நிலப் பூ என்பன பூவகைகளாகும். வெற்றிப்பூவினை விளக்கும்போது, தம்மைப் பேணிப் போற்றிய சேந்தனையும், இணைத்துச் சிறப்பிக்கும் தன்மை கருதத்தக்கது.

''நல்லிசை அம்மன் செல்வச்சேந்தனின்
வரைவுஇல் கல்வியில் படையில் கொடையில்
வெல்லுநர் அணிவாகை வெற்றிப் பூவே (837)

என்பது அந்நூற்பாவாகும்.

தொடையல், வாசிகை, கீழிகை, கோதை, படலை, அலங்கல், கத்திகை, பிணையல், அணியல், அருக்கல், தொடலை, தாமம், தொங்கல், தெரியல், கண்ணி, தார், சூட்டு, மஞ்சரி, ஒலியல், இலம்பகம் என்பன (841) மாலையின் வேறு பெயர்கள். நுதலுக்குரிய மாலைகளாகச் சூட்டு, இலம்பகம், என்பனவற்றை

யும் தொடையல் மாலையின் வேறுபெயர்களாக மாலை, சிகழிகை, வாசிகை, எனத் தனியே சுட்டுவதும் எண்ணத்தக்கது.

மக்கள் பல்வேறு பூக்களையும், அவற்றை அடைவதற்கு உரிய பின்னணிச் சூழல்களையும் அறிந்து, அவற்றிற்குத் தகப் பெயரிட்டனர் என்பதும் இத்தொகுப்பால் நன்கு புலனாகும்

5. இடப் பெயர்த் தொகுதி

தெய்வலோகத்தின் பெயர் எனத்தொடங்கி 13பெயர்களைத் தெய்வ லோகத்துக்குரிய பெயர்களாகச் சுட்டுவர். தானம், துறக்கம், பொன்னுலகு, உம்பர், வானகம், அமருலகு, புத்தேள், (வியன்) உலகு, விசும்பு, விண்ணுலகும், நாகம், பவனம், (மா) சுவர்க்கம் ஆகியன தெய்வலோகப் பெயர் என்பர். திசையின் பெயர் மாதிரம், ஆசை, வம்பல் என்பனவாகும்.

அவனி, காசினி, மேதினி, அளக்கர், தரணி, தாரணி, தராதலம், குவலயம், புவி, பூதலம், தரை, படி, ஞாலம், வையம், அகிலம், கு, மண், புவி, பார், நடு, உலகு, புரணி, பரி, யுகம், நேமி, அகலிடம், பொறையாள், மண்டிலம், பூ, திணை, தலம், பொழில், பிருதுவி, வேலாலயம், தாலம், நிலம், சகம், என்னும் 37 பெயர்களும் பூமியின் பெயர்களாகும்.

நிரயம், துக்கம், பாதாளம், கும்பி, அள்ளல், அளறு, அடுஞ்சிறை, இருணிலம், எரி, திமிரம், இரவுரவம், ஆகியன நரகின் பெயர்களாகும்.

மலையின் பெயர்களாக37-ஐக் குறிப்பர்.மேரு,பொதியமலை கொல்லிமலை, குன்று, மலையுச்சி, மலைப்பக்கம், பாறை, துறுகல், மலைமுழை, கீழறை, கற்புழை,கல், கற்றிரள்,நுழைவாய், மலைப்பிளப்பு, வெடிப்பு, திடர், சிறுதிட்டை, முரம்பு, மேடு' பாதாளம் என மலைகளுக்குத் தொடர்பானவற்றையும் ஒரு சேரக் கூறுவதால் பொருளியைபு துலங்க விளங்குவது கருதத் தக்கது.

மலையையும், அதனைச் சார்ந்த பொருள்களையும், தொகுத்துச் சொல்லியது போலவே அடுத்துக் கடலின் பெயரையும், அதற்குத் தொடர்புடைய கடல்திரை, புனல்திரை, கடற்கரை, கரையின் பொதுப்பெயர், செய்கரை, மலையாறு, கான்யாறு, ஆறு, கழி, கழிமுகம், உப்பளம், காவிரி, பொருநை, குமரி, வையை, ஆன்பொருநை என வரிசைப்படுத்திக் கூறுவார். பின்னர் வாவியின் பெயர்களாக அலந்தை, பண்ணை, கோட்டகம், கிடங்கு, இலஞ்சி, மலங்கல், சுனை, ஏல்வை, ஓடை, வட்டம், தடாகம், மடு, குளம், வலயம், குட்டம், குண்டம்,பட்டம், சூழி, பொய்கை, கேணி, ஆவி, தடம், படுகர், ஏரி, கயம்,அயம், உவளகம், ஆகியவற்றைக் குறிப்பர். எந்திரவாவி, ஆற்றிடைக்

குறை, ஊருணி, கிணறு, ஊறல், குமிழி, நுரை, ஆழம், நிறை புனல், நீந்துபுனல், நீரோட்டம், தெளிநீர், கலங்கற்புனல், குழை சேறு, சேறு என நீர் தொடர்பாகப் பல்வேறு பெயர்களைச் சுட்டும்போது நீரின் பயன்பாடும் அவற்றைப் பல்வேறு நிலைகளில் மக்கள் சேமித்துப் பயன்படுத்திய பழக்கவழக்கங்களும் புலனாகின்றன.

அடுத்து நிலத்தின் பெயர்களாகப் பொல்லா நிலம், வெண் மணல், மணற்குன்று, நுண் மணல், புழுதி, கருமணல், குறிஞ்சி நிலம், நெய்தல் நிலம், முல்லை நிலம், மருத நிலம், பாலை நிலம், மருதநிலத்தின் விளைநிலப்பெயர், முல்லையின் வன்பால் என்னும் பெயர், மென்பால் என்னும் பெயர், கருநிலம் என்னும் பெயர், துருக்கத்தின் பெயர் எனப் பொதுநிலையில் கூறிவிட்டுப் பின்னர் ஊரின் பெயர்களை வகைப்படுத்திக் காட்டுவர்.

ஊரின் பெயர்களாக 26 பெயர்களைச் சுட்டுகின்றார். பாக்கம் பட்டினம், பதி, நகர், சும்மை, பூக்கம், சேரி, புரமே பூண்டி, அகரம், குடி, குறிஞ்சி, கோசரம், அகலுள், நொச்சி, இருக்கை, வேலி, குப்பம், பாடி, குறும்பு, பாழி, சிறுகுடி, தண்ணடை, உறையுள், எயில், வாழ்க்கை, என்பன ஊரின்பெயர்களாகும். குறிஞ்சி நிலத்தூர் பெயர், முல்லை நிலத்தூர் பெயர், நகரப்பதியின் பெயர், சூழ்கழியிருக்கையின் பெயர், மலையாற்றடுத்த ஊர்ப்பெயர் என நிலத்தையடுத்து ஊர்ப்பெயர்களுக்குப் பெயரிடும் மரபு இருப்பதையும் தெரிந்து கொள்ள முடிகின்றது.

உறையூர், மதுரை, கருவூர், காவிரிப்பூம்பட்டினம், எனத் தலைநகரங்களின் பெயர்களைக் கூறிய பின்னர், அங்காடி, ஆவணம், தெரு, சந்தி, நாற்சந்தி எனத் தெருக்களின் வகைப்பெயர் களையும் சுட்டுகின்றார்.

சினகரம், சேதியம், தேவராலயம், நிலையம், பாழி, பள்ளி, நிகேதனம், மந்திரம், ஆலையம், தேவகுலம், கோட்டம், நகர் தனி, வானவர், உறையுள், ஆகியன கோயிலுக்குரியன. மாடம், மனை, உறையுள், பதி, வசதி, இடமே, பாத்தில், அகம், வயின், இல்லம், இடவகை, சேர்வு, வீடு என்பன வீட்டிற்குரியபெயர்கள். கூரையும், குரம்பும் சிற்றில் வகையின. சோபானம் என்பது தாழ்வாரத்தின் மறு பெயர்.

கழகம் என்னும் பெயருக்கு அவர் தரும் விளக்கம் வருமாறு:

> ''செல்லல் தீர்க்கும் பல்புகழ்ச்சேந்தனில்
> வல்லுநர் நாவலர் வாய்ந்த இடமும்
> மல்லும் சூதும், படையும் மற்றும்
> கல்வி பயில் களமும் கழகம் ஆகும்.

இன்று கழகம் என்பது அக்காலப் பொருளை இழந்து நிற்கின்றது. யானை குதிரை சென்ற வழிகள், துயிலிடங்கள், மட்கல சுடுமிடம், பொருகளம், எனப்பல பெயர்களைச் சுட்டுவர்.

கதவினுள் வாசலின் பெயர் 'புதவு' என்பதாகும். முதைப் புனம், இதைப்புனம் என்பன முறையே பழங் கொல்லையையும், புதுக் கொல்லையையும் குறிப்பன. வழி, அருநெறி, கவர்த்தநெறி, இழிந்தேறப்படுவழி, எனவழியின் பெயர்களை வகுத்துரைக்கின்றார். மாடு, சிறை, உளி, மருங்கு, ஞாங்கர், முள், பால், புடை பாங்கர் என்பன பக்கம் ஆகும். இடப்பகுதியின் பெயர்களாகக் கூறப்படும் கண், கால், புறம், என்று தொடங்கும் நூற்பா இலக்கண மரபில் கூறும் நெறியை ஒத்ததாக விளங்குவது கருதத் தக்கது.

### 6, பல்பொருள் பெயர்த் தொகுதி

பொன்னுக்குரியனவாக 28 பெயர்களைக் குறிப்பிடுகின்றார். ஆடகம், மாசை, ஈழம், ஏமம், மாடு, காணம், கனகம், தமனியம் வெறுக்கை, சொன்னம், பொருள், அரி, ஈகை, நிதி, கருந்தனம் காஞ்சனம், பீதகம், மாடை, தொடுக்கம், அருத்தம், சாமீகரம், பூரி, சந்திரம், மாழை, சாதரூபம், நிதானம், இரணியம், பொலம் ஆகிய 28 பெயர்கள் பொன்னிற்குரியன.

ஐவகை உலோகம், எழுவகை உலோகம், நவமணி, கடவுள் மணி, அகல்மணி, மாணிக்கம், முத்து, தரளம், பவளம், சங்கநிதி வடிவு, பற்பநிதிவடிவு, என உயர்ந்த பொருள்களின் விளக்கங் களும் நிதியம், பண்பாரம் ஆகியவற்றின் பெயர்களும் தரப் பட்டுள்ளன.

இரசதம், தாரம், களதவுதம் ஆகியன வெள்ளிக்குரியன. வெண்கலம், பித்தளை, செம்பு, இரும்பு, ஈயம், காரியம், தரா, காந்தமணி, சந்திர காந்தமணி, சூரியகாந்தமணி ஆகியவற்றைக் கூறுகின்றார். இரும்பை ஈர்த்து வாங்குவது காந்தமணி, சந்திரன் ஒளியில் தண்ணீர் கால்வது சந்திர காந்தமணி. சூரியன் ஒளியில் தீக்கால்வது சூரிய காந்தமணி என்பார்.

பல பண்டத்திற்குரிய பெயர்களாகப் பண்ணியம், கூலம், வளம், பண்டம், பன்னிகாரம் ஆகியவற்றைக் குறிப்பர். தாரம் என்பது அரும்பண்டப் பெயராகும். பாளிதம் கற்பூரம் எனப்படும். பீதம், காலேகம், வட்டிகை, புளி என்பன நால்வகைச்சாந்து. கலவைச் சேறு, காலேகவண்ணம், தளம், விரை என்பன சாந்திற் குரிய பொதுப்பெயர்கள். குங்குமம் செஞ்சாந்து என்பார். பூசுவன, அப்புவன, கணிவன ஆகியவற்றின் பெயர்களை ஒரு சேரத் தொகுத்துத்தந்துள்ளமை கருதத்தக்கது.

புண்டரம், திலதம் என்பனவற்றை நுதற்புனைகுறி என்று சுட்டுவார். சிந்தூரம், சாதிலிங்கம், குங்கிலியம், பெருங்காயம்,

அரக்கு, சுக்கு, ஏலம், அதிமதுரம் ஆகியவற்றை வகைப்படுத்தி யுரைப்பார். விறகு, ஓமவிறகு, நெருப்புவிறகு, கடைக்கொள்ளி, கரி, சாம்பர், புகை, மணப்புகை ஆகியவற்றைக் குறிப்பிடுவதால் பல்வேறு வகையான விறகு சுள்ளி ஆகியவற்றைப் பயன் படுத்திய நிலை புலனாகும்.

உண்பன வகையில் சோற்றின்பெயர் தொடங்கிப் பல வற்றைக்காட்டுவர். புன்கம், விதவை, பொம்மல், போனகம், அன்னம், ஓதனம், அயினி, அடிசில், பாரிதம், பொருவு, மிசை, பரல், துப்பு, அசனம், அமலை, உணவு, மிதவை, கவளம், சொன்றி, நிமிரல், மடை, கூழ், புழுக்கல், மூரல் என்பன சோற் றிற்குரிய பெயர்களாகும். உண்டி, பதம், வல்சி என்பன தின்னுஞ் சோற்றின் பெயர் என்பார். கூழ் என்பது உண்ணும் பெயர் அனைத்திற்கும் பொது என்பர்.

அடிசில், புழுக்கல், தெய்வஉணவு, கருனை, பிட்டு, உக் காரி, மோதகம், பில்லடை, அப்பம், தினைமா, சிற்றுண்டி, புளிங் கறி என்பன உணவுப் பொருட்களின் பெயர்களாக விளங்குகின் றன. சிற்றுணவாகக் கருனை என்பதையும் அப்பம், பிட்டு, அஃ குல்லி, இடி, என்பன சிற்றுண்டி என்பதையம் குறிப்பார்.

சிற்றுண்டி என்பதன் பழமை கருதத்தக்கது. அப்பவகையில் ஒன்றாகப் பூரிகம் என்னும் ஒன்றையும் கூறுகின்றார். இன்றுபெரி தும் விரும்பியுண்ணப்பெறும் பூரியின் வடிவம்தான் பூரிகம் தோய்வை என்று சொல்வதின் பாட பேதம் தோசை. பலநூறு ஆண்டுகட்கு முற்பட்ட உணவுப் பழக்க வழக்கங்களை இக் குறிப்புகளால் அறிந்து கொள்ளமுடிகின்றது.

கள்ளின் பெயர்களாக 25 பெயர்களைக் குறிப்பிடுவார். இக்கு, நனை, தேன், முருகு, தொப்பி, நறவு, பிரசம், தணியல், சுரை படு, வேரி, மட்டு, தேறல், சாறு, பானம், வடி, பிழி, மது, வழி, தொண்டி, யானம், அரிட்டம், சாதி ஆகியன கள்ளிற்குரிய பெயர் கள். இவையேயன்றிப் பேத வகைக்கள்ளின் பெயராக 24 பெயர் களைக் குறிப்பிடுகின்றார். பருகுவன எவற்றிற்கும் பானம் என்பது பெயர் என்பார். உண்பன துற்றி, தின்பன திற்றி எனக் குறிப்பிடுகின்றார்.

பறவைக்கும் ஒருசார் விலங்கிற்கும் உணவு, இரை, உண்டி என்றும், இலைநுகர் விலங்கின் உணவின் பெயர் குளகு என்றும் ஒழிந்த பொருள்கள் மிச்சில், எச்சில் என்றும் கூறுவர். இறுதியில் கூறப்பட்டுள்ள ஆறு நூற்பாக்களும்(1132-1137) இப்பகுதிக்குரி யவை அன்று என்பார் திரு.மு. அருணாசலம் பிள்ளை. இவை வேறு தொகுதிகளுக்கு உரியவையாக இருக்கலாம்.

## 7. செயற்கை வடிவின் பெயர்

செயற்கை வடிவின் இலக்கணத்தைத் திவாகரர்பின்வருமாறு கூறுகின்றார்:

> ''எண்ணிய எழுவகை உலோகத்தின் மரத்தின்
> மண்ணின் தோலின் நூலின் மற்றும்
> திண்மைசெய் வடிவே செயற்கை வடிவு ஆகும். (1139)

இதற்குப் பின்னர் படைக்கருவிகள் பற்றிக் கூறத் தொடங்குகிறார். சூலம், மழு, சக்கரம், வில் ஆகியவற்றின் பெயர்களைக் கூறுவார். சிலை, தனு, வேணு, கார்முகம், சாபம், முனி, சார்ங்கம், சராசவம், பிருகம், தோதண்டம், தவர், கொடுமரம் என்பன வில்லிற்குரிய பெயர்களாகும். பினாகம், என்பது சிவன் வில்லின் பெபர். சார்ங்கம் திருமாலின் பெயர் என்பார்.

அம்பிற்குரிய பெயர்களாகப் பகழி, வாளி, வண்டு, பாணம், சரம், பாத்திரம், சிலீமுகம், பல்லம், புங்கம், கணை, குதை, கங்கபத்திரம், அத்திரம், தோணி, கோல், வாசிகம் என 16 பெயர்களாகக் கூறுவார். மரக்கோல், மொட்டம்பு, அம்புத்தைதை, அம்புக்கட்டு ஆகியன குறிப்பிடப்பெறுகின்றன. பின்னர் வேல், வாள் தண்டாயுதம், கணிச்சி, இலைமுக்கரிகம், நாராசம், இருப்பு, முள், கவண் ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

வாளின் பெயர்களாக நாந்தகம், கட்கம், நவிர், ஏதி, கண்டகம், வேணு, வஞ்சம், நாட்டம், கடுத்தலை, உவணி, கரவாளம், கோணம், வசி ஆகியன கூறப்பட்டுள்ளன. ஈர்வாள், உடைவாள், கொடுவாள் ஆகியவற்றின் வேறுபாட்டையும் எடுத்துரைப்பார்.

படைக்கலம், தானை, கடுமுள், சுதனம், படை, ஏதி, துப்பு, கழுமுள் கருவி என்பன ஆயுதப் பெயர்களாகும்.

ஆயுதத்தின் கூர்மையாக வள், அயில், நுதி, நுனை, வை, ஆர், நிசிதம், அள், வயிரம், நு, என்பனவற்றைக் குறிப்பிடுகின்றார்.

அரணம், சாலிகை, ஆசு, பரணம், கவசம், கண்டம், மெய்யுறை, தம்பம், கசை, சுரிகை, பரம், பாரம், ஆகியன மெய்புகு கருவிகளாகும். தலைக்கருவி, கேடகம், கைக்கட்டி, கழுத்திடு பெயர், எனப் பல கருவிகளின் பெயர்களைச் சுட்டும்போது அக்காலத்திய போர் முறைகள், பழக்கவழக்கங்கள் பயன்படுத்திய கருவிகள் பற்றியும் அறிந்து கொள்ளமுடிகிறது. திவாகரம் இவற்றையெல்லாம் நன்கு தொகுத்து வரையறைப்படுத்தித் தந்த பான்மையும் வியத்தற்குரியதாய் விளங்கும்.

வீட்டிலுள்ள பாத்திரங்கள், உண்கலங்கள், பெண்டிர் அணியும், அணிவகைகள் ஆடவர் அணிவகை, இசைக்கருவிகள்,

வீட்டுப்பொருட்கள், ஊர்தி வகைகள் எனப் பிற தொகுதிகளில் கூறப்படாத அனைத்துப் பொருட்களையும் இத்தொகுதியில் தொகுத்தபான்மை எண்ணி மகிழ்தற்குரியது இப்பொழுது வழங்கி வரும் பல பொருட்களின் தொன்மையையும் அறிந்து கொள்ள முடிகிறது. பொருள்களைப்பற்றி அறிந்து கொள்ள விழைவார்க்கு இஃதோர் களஞ்சியமாகத் திகழ்வதை நன்கு உணர முடியும்.

## 8. பண்பு பற்றிய பெயர்த் தொகுதி

வடிவு, அளவு, வண்ணம், உணர்வில் புலப்படும் உண்மைப் பொருள் ஆகியன பண்பின் குணங்களாகும் என்பர். வட்டவடிவத்திற்குரிய பெயர்களாக வலயம், நேமி, திகிரி, மண்டிலம், பருதி, ஆழி, பாண்டில், விருத்தம், கோளகை, கடகம், பாலிகை, கொம்மை, தட்டு, வளையம், சக்கரம், சில்லி, ஆகியவற்றைக் குறிப்பர். வளைவு, திரள்வடிவு, குவிதற்பொருள், தொகுதி, துறுதல், ஐம்மை வடிவு, பரந்த வடிவு. குமிழ்ப்புறு வடிவு, மொக்குள் வடிவு என வடிவவேறுபாடுகளைக் காட்டுவர். உள்துளை, துளையுடைப்பொருள், துவாரம் என்பனவற்றின் வேறுபாடுகளையும் உணர்த்துவர்.

பெருமைக்குரிய பெயர்கள் 39 என்பர். தடம், தடவு, விபுலம், வியலிகை, வியன், விறல், முடலை, அகலுள், மோடு, செம்மை பீடு, கண், பாழி, பின், முன்பு, மான், மா, வந்தை, கலந்தை பரி, பணை, அழுவம், பிறங்கல், படு, நனி, இயக்கம், வியம், தகை, செம்மல், அணி, நன்று, அருமை, இருமை, கருமை, கதழ்வு, கயவு, மூரி, பாடு, அண்ணல் ஆகியன பெருமைக் குரியன.

பருமை, சிறுமை, சிறிது, முழுது என்பனவற்றின் பெயர்களும் தரப்பட்டுள்ளன. இறை, அணு, வஞ்சம், சிறிது, சின்னம், வறிது, ஆசு என்பன சிறுமைக்குரியனவாம். 'அகிலம்' முழுதும் என்பார்.

மிகுதியின் பெயர்களாக அமலை, உறு, தவ, நனி, உருப்பு, ஆற்றல், கழிவு, விதப்பு, இறப்பு, கதழ்வு, கடுமை, பெருமை, சிறப்பு, ஆன்றல், மதர்வு, பிறங்கல், அதிகம், புதுமை, கயவு, பரம், பொற்பு, பொக்கம், பொம்பல் என்பனவற்றைத் தொகுப்பர். உரிச்சொற்கள் பலவும் இதில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

உவப்பு, துங்கம், உன்னதம், மோடு, நிவப்பு, சேண், பிறங்கல், ஏந்தல், ஓங்கல், நிமிர்தல், புரை, உறை, என்பன உயர்ச்சிக்குரிய பெயர்கள். நீளம், நுண்மை என்பனவற்றின் பெயர்களும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. நுவணை, ஒய்தல், நுழை, அயிர், நுணங்கு, சாயில், நுணுகு, முளரி, நுணுக்கம், ஆய்தல், நிழற்றல், நொசிவு, நுனி, கூர்மை, என்பன நுண்மையின் பெயர்கள்.

ஆய்தல் என்னும் பொருள் நுண்மை, அகலம் ஆகியவற்றிற்கும் வருவது காண்க. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும் என்னும் தொல்காப்பிய நூற்பாவை (உரியியல். 16) அப்படியே எடுத்தாண்டுள்ளார்.

விறப்பு, உறப்பு, வெறுப்பு, நனி, செற்றல், பொதுளல், இங்கல், இவர்தல், துற்று, சடிலம், என்பன செறிவுக்குரிய பெயர்களாகும். மலிதல், மல்கல், மலர்தல், ஆர்தல், நெகிழ்தல், துவன்றல், கெழுமல், தெவுளல், ஆகியன நிறைவுக் குரியன. வண்ணங்கள் செம்மை, கருமை, பசுமை, வெண்மை ஆகியவற்றோடு பொன்மையும் சேர்ந்து ஐந்து என்பர். பீதம், பிங்கலம், பொற்கெனல்பொன் நிறமாகும். நிறத்தின் பொதுப் பெயர்களாகப் புகர், மேனிமாமை, கேழ், வண்ணம், குருப், கொழுமை, கெழு, சந்தம்,உரு என்பன குறிக்கப் பெறுகின்றன.

ஒளியின் 20 பெயர்களைக் கூறி அடுத்து ஒளிக்குரிய வினைச் சொற்களைத் தொகுப்பர். அலங்கல், சுடர்தல், அவிர்தல், இமைத்தல், வயங்கல், தயங்கல், ஔிர்தல், நடுதல், இலங்கல் என ஒன்பதும் ஒளிவிடுவதற்குரியனவாம்.

கட்டழகின் பெயர்களாக ஏர், வனப்பு, எழில், யாணர், மாமை, தையல், காரிகை, தோட்டி, கவின், விடங்கம், வாமம், வகுப்பு, ஒப்பு, மஞ்சு, பொற்பு, காமர், அணி என்பனவற்றைக் குறிக்கின்றார். இவையேயன்றி அழகுக்குரியனவாக நவி, அந்தம், மை, பூ, பை, பொலம், திவி, ஒண், மாண்பு, பதம் ஆகிய 10 பெயர்களைச் சுட்டுவர்.

நயம், புணர்வு, கேண்மை என்பன கண்ணோட்டத்திற்குரியன. இறுமாப்பிற்கு ஏக்கழுத்தம் என்ற சொல்லைத் தருவது எண்ணத்தக்கது. செம்மாப்பு அகமலர்ச்சிக்குரியது. முதுக்குறைவு பேரறிவின் முதிர்ச்சியாகும். எய்யாமை அறியாமை என்பர். புலம்பே தனிமை என்பதும் தொல்காப்பிய நூற்பாவாகும்.

துன்பத்தின் பெயர்களாக 41ஐக் காட்டுவார். இன்னல், அழுங்கல், வருத்தம், பிணி, இடுக்கண், அல்லல், நோ, இன்னாங்கு.அரந்தை,இடும்பை, படர், துனி,துக்கம், அளுர், புலம்பு, எவ்வம், நடலை, கம்பலை, செல்லல், பாசறை, பையுள், சூர், துயர், பைதல், இரக்கம், சிறுமை, விழுமம், கவலை,பீழை, வறுமை, பருவரல், புன்கண், நோவு, அலமரல், உறுவல், கவ்வை, பனி,வெய்துறல், மம்மர்,உறுகண், அலத்தல் ஆகியன துன்பத்திற்குரியனவாம்.

'பூட்கைக் கிளவி'யை மேற்கோள் என்பர். பழமை, புதுமை, ஈன்றணுமை, நிலையின்மை என வகைப்படுத்திக் கூறுகின்றார். பிறப்பு, கழிபிறப்பு, இப்பிறப்பு, வருபிறப்பு என முறை வைப்பார்

ஆதி, மோனை, தொடக்கம் முதலுக்குரியன என்பார். அநுபவத்திற்குரிய சொல்லாகத் துவ்வு, துப்புரவு என்பனவற்றைக் கூறுவார்.

## 9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி

கருமம், செயல், தருமம், தொழில், வினை என்பன தொழிலின் பெயர்கள் என்பார். தொறு என்னும் கிளவி, தொழிற் பயில்வு என்பர். மகளிர் விளையாட்டுக்களாக ஓரை, பண்ணை கெடவரல், பொய்தல், உண்டாட்டு, கிரீடை, உப்பு, கேளி, வண்டல், தொடலை ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றார். பாராட்டினைப் பரிந்து கொண்டாடல் என்பார். வதுவை, கடி, மன்றல் ஆகிய மூன்றும் புதுமணப் பெயருக்குரியன. முருகு, சாறு, சேறு ஆகியன விழாவின் பெயர்கள் என்பர். ஒப்பனைக்குரியனவாக மண்ணல், கை செய்தல், பொற்பு, அலங்கரித்தல், புனைதல், மிலைதல், வேய்தல், அணிதல், வனைதல் ஆகியவற்றைக் குறிப்பர்.

'பண்பின் தொழிலைப் பருகும் கிளவி' என உண்ணலைச் சுட்டித் துய்த்தல், அருந்துதல், ஆர்தல், துவ்வுதல், துற்றல், நுகர்தல், மாந்தல், அயிறல், உண்டல், தின்றல், பருகுதல் ஆகியன அவற்றிற்குரிய பெயர்கள் என்று குறிக்கின்றார். கரப்பு கட்டல், கள்ளல், களவு, கரவடம், பட்டிமை ஆகியன களவுக்குரிய பெயர்களாகும்.

கோபத்திற்குரிய பெயர்களாகக் கறுப்பு, குரோதம், கலாம், உடன்றல், சிவத்தல், வெயர்த்தல், விளிவு, செற்றம், முனைவு, காய்தல், பைத்தல், விடைத்தல், சினம், வேகம், கதம், வெருள் முனிவு, கீறல், வருத்தல் ஆகிய 19 ஐயும் குறிக்கின்றார்.

ஞெள்ளல், சண்டம், சூத்திரம், வெம்மை, பொள்ளே, கோரம், ஐதெனல், கதுமெனல், பொருக்கெனல், நொய்தெனல் வெய்தெனல் ஆகியவற்றை விரைவுக்குரிய பெயர்கள் என்பார். நீர்ச்சுழி, சுழலுதல், மீளுதல், கொடுபோதல் என்பனவற்றைத் தொடர்பு பற்றி அமைத்துள்ளார் எனலாம்.

ஆராய்தலுக்குரியனவாகத் தேர்தல், தூக்கல், ஆய்தல் தெரிதல், ஓர்தல், தெளிதல், ஆய்வு என்பனவற்றைச் சுட்டுகின்றார். வேள்வி, வண்மை, வேளாண்மை, உதவி, கொடை உபகாரம், கவிகை பொழிதல், இடுதல், இருத்தல், பணித்தல், ஈதல், தருதல், வழங்கல், வீசல், நல்கல், அருளல், அளித்தல், புரத்தல் என்பன தியாகத்திற்குரியனவாம்.

வகிர்தல், குத்தல், அடித்தல் வசமாக்குதல், மூண்டிதமாக்கல், வாடுதல், கொள்ளை என்பனவற்றின் பொருள்களையும் ஒருபுடை வைத்துரைப்பது கருதத்தக்கது. செயல் பற்றிய பல்வேறு சொற்களும் வினையாளுமைத் திறத்தைக் காட்டுவதாக அமைகின்றது எனலாம்.

## 10· ஒலி பற்றிய பெயர்த் தொகுதி

சொல்லுதற்குரியனவாக விரித்தல், கதைத்தல், உரைத்தல், கூறல், தெரித்தல், ஆடல், நொடித்தல், நவிலல், சாற்றல், பணித்தல், மொழிதல், வலித்திடல் ஆகிய 12 பெயர்களைக் கூறுவர். சொல், பதம், வாசகம், சத்தியம், மெய், பொய், குறளை, புறங்கூறல், வெறும் புறங்கூறல், ஆசில் வாழ்த்து, துதித்தல், வாழ்த்து என ஒவ்வொன்றிற்கும் இயைபுபடப் பெயர் களை அமைத்துள்ளமை கருதத்தக்கது.

வழுத்தல், பரவுதல், ஏத்தல், துதித்தல் போற்றல், பரசுதல், தோத்திரம், மெச்சல் என்பன துதித்தற்குரியன. அம்பல், கௌவை, ஏச்சு, அலர், பழிச்சொல், பரிவாதம், தீச்சொல், என்பன பழிச்சொல்லுக்குரியனவாகும். பிதற்றுதல் என்பதற்கு விடாது பேசுதல் என்பது பொருளாகும். நிரம்பாமென் சொற்களாக நிமற்றல், மிழற்றல், மழலை கொஞ்சல், குதலை, உல்லாபம், மிழலை என்பனவற்றைக் கூறுவர்.

வாய்மை, சாதம், சரதம், உண்மை, வாய், ஆணை, திடம், சத்தியம், மன்றம், நிலைமை, வேளாண்மை, நிச்சயம் என்பன மெய்யின் பெயர்களாம். பலரறி சொல்லுக்குப் பெருஞ் சொல் என்பது பெயராகும். கூவல், விளித்தல், உளைத்தல் கரைதல், வாவெனல், மாற்றம் ஆகியன அழைத்தலுக்குரிய பெயர்களாகும்.

தமிழ் இலக்கணச் சொற்கள் அனைத்தும், இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. அசைச் சொல், சாரியை, இடைச்சொல், வேற்றுமை, சுட்டு, பாவின் வகைகள், புறப்பொருள் இலக்கணங் களாவன, காஞ்சி, முதுபாலை, முல்லை முதலியன, இசைச் சொற்களின் பெயர்கள், குறிஞ்சியாழ், பாலையாழ், நெய்தல் யாழ், ஏழிசையின் பெயர், இராகத்தின் பெயர் என அனைத்து வகை ஒலிப்பெயர்களையும் இத் தொகுதியுள் காணலாம்.

கலித்தல், சும்மை, கம்பலை, அழுங்கல், சிலைத்தல், துவைத்தல், சிலம்பல், இரங்கல், இமிழ்த்தல், விம்மல், இரட் டல், ஏங்கல், கனைத்தல், தழங்கல், கறங்கல், அரற்றல், இசைத்தல், சிரற்றல், தொனித்தல், தெழித்தல், குமுறல், உரற்றல், உளைத்தல், உரைத்தல், ஏங்கல், இரைத்தல், உலம் பல், இழத்தல், முழக்கல், குரைத்தல், தெவிட்டல், குன்றல், இயம்பல், சிறும்பல், அலும்பல், சிதைத்தல், புலம்பல், முதலி யன ஒலித்தலுக்குரிய பெயர்களாம்.

இங்ஙனம் பல்வேறு சொற்களையும் தொகுத்துப் பார்க்கும் போது ஒவ்வொரு சொல்லுக்கும் இடையேயுள்ள நுட்பமான

வேறுபாட்டினை அக்காலத்தில் உணர்ந்திருந்த தன்மை நன்கு புலப்படும்.

## 11. ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதி

ஆதிப்பொருள், அந்தப் பொருள் என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஆதிப்பொருள் முதலில் அமைந்துள்ளது. பொருள் கூறப்படும் சொல் நூற்பாவின் முதலில் வந்தால் அது ஆதியிற் பொருள் எனப்படும், அச்சொல் நூற்பாவின் இறுதியில் வந்தால் அது அந்தத்துப் பொருள் எனப்படும். 'அங்கதம் தோளணி அரவுமாகும்' என்னும் நூற்பாவில் அங்கதம் முதலில் வருகின்றது எனவே ஆதியிற் பொருளாகும். 'சேமம் காவல் இன்பம் இரவு, 'பொன், ஏமாப்பு, மயக்கமும் ஏமமாகும்.' என்னும் நூற்பாவில் ஏமம் இறுதியில் வருகின்றது. எனவே இது அந்தத்துப் பொருளாகும், இவ்வமைப்பினைத் திவாகரர் அமைக்கவில்லை என்றும் பின்னரே இவ்வமைப்பு உருவாக்கப் பெற்றது என்றும் கூறுவர்.

ஆதிப் பொருள் 224 நூற்பாக்களும், அந்தப் பொருள் 142 நூற்பாக்களும் என இத்தொகுயில் மொத்தம் 366 நூற்பாக்கள் உள்ளன. முதலில் ஆதிப்பொருள், அந்தப்பொருள் எனத் தொடர்ந்து நூற்பாக்களைத் தந்த பின்னர் தலைப்பிட்டும், வகைப்படுத்தியும் இப்பதிப்பில் அமைக்கப்பட்டுள்ளது. முழுவதும் அகராதி அமைப்பில் தரப்பட்டுள்ளது. இது பின்னையோர் செய்த மாற்றம் என்பர்.

சொற்பொருள் மிக விளக்கமாக அமைந்துள்ள நிலையில் சில பகுதிகள் காணப்படுகின்றன. உறை என்னும் பெயருக்கு பின்வருமாறு விளக்கம் தருவர்:

> 'நீர்முத லாகிய துளியும் மருந்தும்
> முதனோய் நீக்கி இன்பங் கொடுக்கும்
> பொருளும் கூறை மாசு கழுவுயர் நீரும்
> பாலுறு பிரையும் காரமும் ஒழுகலும்
> ஓரிடைச் சொல்லும் உறையெனற் குரிய'

என்று சொற்களுக்குப் பொருள் விளக்கம் வரையறுத்துக் கூறப்படுவதைக் காணலாம்.

தடி என்னும் பெயருக்குத் தரும் விளக்கமும் முன்னையோர் மரபினைத் தழுவியே கூறப்பட்டுள்ளது. காரிகை என்னும் பெயர் அழகு, அழகுடைமாதர், மதன், கட்டளைக்கலித்துறை என்னும் பொருள்கள் பெற்றுவருவதைக் குறித்துள்ளார். சித்திரம் என்பதற்கு 'மெய்யே போலப் பொய்யைப் புணர்த்தல்' என விளக்கம் தருவது நயமாகவுள்ளது.

## 12. பல்பொருட் கூட்டத் தொருபெயர்த் தொகுதி

இத்தொகுதியின் முதல் நூற்பா 'கூறியது கூறினும் குற்ற மில்லை' என்று கூறும். முன்னர் தந்த பலவற்றையும் தொகுத்துக் கூறுவதால் இந்நூற்பாவைக் கூறியிருப்பார்போலும்.

ஒன்று என்பது வீடுபேற்றினைக் குறிக்கும் என்பார் இருமை, இருவகைத் தோற்றம், இருவகைக் கந்தம், இருசுடர், இருவகை அறம், இருவகை மரபு, இருவகைப் பொருள், இரு வகை இன்பம், இருவகை வீடு என இரண்டு என்னும் தொகையி னைப் படைப்பில் உள்ள பொருள்களால் தொகுத்துக் காட்டுவார்.

'ஞாபகம் செம்பொருள் நடையின் எப்பொருளும் காசு இன்று உரைப்போன் கமகன்' என்பார். இனியன கூறும் ஆற்றலுடை யோனை 'வாக்கி' என்னும் சொல்லால் குறிப்பிடுவது புதுமை யாகும்.

குதிரையின் ஐந்தொழில் நடைகளாக மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி ஆகியவற்றைக் குறிப்பர். ஐந்து வகைத் தாயராசப் பாராட்டும் தாய், ஊட்டும்தாய், முலைத் தால், கைத்தாய், செவிலித்தாய் என்போரைக் குறிப்பிடுவார். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்க்குரிய அறுதொழில் களைத் தொகுத்துக் கூறுவார். அறுசமயங்கள் வைசேடிகம், நையாயிகம், மீமாங்கிசம், ஆருகதம், பவுத்தம், லோகாயதம் என்பார். படை, குடி, கூழ், அமைச்சு, அரண், நட்பு என்னும் ஆறும் அரசியல் அறுவகை என்பார். இன்பத்தினை அறநிலை இன்பம், மறநிலை இன்பம் என இருவகைப் படுத்துவதும் எண்ணுதற்குரியது.

செங்கோல் வேந்தன் பெறுநெறி ஏழாக அறம், பொருள், இன்பம், அன்பு, மறுமை, புகழ், மதிப்பு, என்பனவற்றைக் குறிப் பிடுகிறார், சிதடு, பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் ஆகிய எட்டும் எண்பெயரெச்சம் என்பார். இருபத் தைந்து தத்துவம், இருபத்தெட்டு அலங்காரம், முப்பத்திரண்டு அறம் என்பன போன்றவற்றைத் தொகுத்தும் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

இத் தொகுதி பெரும்பாலும் தொகைப் பெயர், சிறப்புப் பெயர் ஆகியனவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது எனலாம்.

### திவாகரப் பதிப்புகள்

திவாகர நிகண்டை முதன்முதலில்பதிப்பித்து வெளியிட்டவர் சென்னைக் கல்விச் சங்கத்துத் தமிழ்த் தலைமைப் புலவர் தாண்டவராய முதலியார் ஆவார்.

இவர் திவாகர ஏட்டுச்சுவடிகளை ஒத்துப் பார்த்துப் பிழை களைக் களைந்து செம்மைப்படுத்திப் பதிப்பிக்க முற்பட்டார்.

திவாகரப் பகுதிகளில் சில இடங்களில் புதுச் சூத்திரங்களையும் இவர் செய்து சேர்த்துள்ளார். தாம் சேர்த்த புதுச் சூத்திரங்களுக்கு உடுக்குறியிட்டுக் காட்டியுள்ளார்.[1]

திவாகரம், தெய்வப்பெயர்த்தொகுதி முதல் பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி ஈறாகப் பன்னிரண்டு தொகுதிகளைக் கொண்டுள்ளது ஆகும். இவை முழுமையும் தாண்டவராய முதலியாரால் பதிப்பிக்கப் பெறவில்லை,

தாண்டவராய முதலியார் அச்சிட்டது முதல் எட்டுத்தொகுதிகளே. அவர் தமது வேலையின் நிமித்தம் விசாகப்பட்டினத்திற்குச் சென்று தங்க நேர்ந்தமையால் தொடர்ந்து அவரால் அச்சு வேலைகளைக் கவனிக்க இயலவில்லை. இச் செய்தி அவர் கல்விச் சங்கத்துப் புத்தக பரிபாலகராகிய கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளைக்கு எழுதிய கடிதத்தால் தெரியவருகிறது. எட்டுத் தொகுதியைத் தொடர்ந்து ஒன்பது பத்தாம் தொகுதிகளைக் கல்விச்சங்கத்து வித்துவானாயிருந்த பு. நயநப்ப முதலியார் பரிசோதித்து முதல் பத்துத் தொகுதிகள் வரையில் ஒரு தொகுதியாக 1839 ஆம் ஆண்டு வெளிப்படுத்தினார். 'மற்றையிரண்டு தொகுதிகளும் பின்னர் வெளிப்படுத்தப்படும்' என்னும் குறிப்பும் இப் பதிப்பில் காணப்படுகிறது. இதன்படி எஞ்சிய இரு தொகுதிகளும் திவாகரத்தின் இரண்டாம் தொகுதியாக அடுத்து அச்சிட்டு வெளிப்படுத்தியிருத்தல் கூடும். அந்தப்பதிப்பு கிட்டாமையால் சரியான ஆண்டு விவரம் குறிக்க இயலவில்லை.

1839-இல் வெளிவந்த முதற்பதிப்பு, 'சேந்தன்றிவாகரம்' என்னும் பெயரில் 245 பக்கங்கள் கொண்டதாய் அமைந்துள்ளது. நூலுள் இரு பத்தியாக முதற்பகுதியில் சூத்திரமும் எதிரே அதற்குரிய பெயர் விளக்கமும் அமைக்கப்பட்டுள்ளன.

எ, ஒ என்னும் குற்றெழுத்துக்கள் தொல்காப்பியர் சுட்டியபடி புள்ளியிட்டு அச்சிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு தொகுதிச் சூத்திரங்களுக்கும் தொடர் எண் இட்டுள்ளார். ஆக, தொகுதி பத்துக்கும் சூத்திரம் 2286 என்று இறுதியில் சுட்டப்பட்டிருக்கிறது; இறுதிப் பக்கமாகிய 245 ஆம் பக்கத்தில் 'பிழை திருத்தல்' என்னும் தலைப்பில் 17 பிழை திருத்தங்கள் காட்டப்பட்டுள்ளன. அதன் கீழ், சென்னைப் பட்டணத்தில்—தி. விசாகப் பெருமாளையரது கல்வி விளக்க வச்சுக் கூட்டத்தில் அச்சிற் பதிக்கப்பட்டது' என்னும் விவரமும் குறிக்கப்பட்டிருக்கிறது.

மர்டாக்கின் நூல் விவர அட்டவணையின் முன்னுரையில், சேந்தனார் என்பவரால் திவாகரம் பத்துத் தொகுதிகளில் இயற்றப்பட்டுள்ளது என்னும் விவரம் காணப்படுகிறது. இது திவா

---

1. திவாகரம், முதல்பதிப்பு (1839), முகப்புப்பகுதி

கரத்தின் மேற்குறித்த முதல் பதிப்பைப் பார்த்து எழுதிய தாகலாம். திவாகரரை ஆதரித்த சேந்தனைத் திவாகரம் இயற்றினாரென்று தவறாக உணர்ந்ததன் விளைவே இக்குறிப்பு. பின்னர் அட்டவணையில் திவாகரம் பற்றிக் குறிக்குமிடத்தும் இவ்வாறே இந்நிகண்டு ஆசிரியர் பற்றிக் குறிப்பு எழுதுகிறார். ஆனால் இங்குத் திவாகரம் பன்னிரண்டு தொகுதிகளை உடையது என்று சுட்டப்பட்டுள்ளது. பல பதிப்புகள் வெளிவந்திருப்ப தாகவும் குறித்துள்ளார். இரு தொகுதிகளாக இந்நிகண்டு வெளி வந்துள்ளதையும், முதல் தொகுதி 242 பக்கமும் இரண்டாம் தொகுதி 24 பக்கமும் கொண்டது என்னும் விவரமும் தரப்பட்டுள்ளன. இங்கு குறிப்பிடப்படும் இரண்டாம் தொகுதி பு. நயநப்ப முதலியார் உள்ளிட்ட சென்னைக் கல்விச் சங்கத்துப் புலவர் களின் பதிப்பாக இருத்தல் கூடும்.

திவாகரத்துக்குக் கிட்டிய பதிப்புகளில் அடுத்தபடியாகக் குறிப்பிடத் தக்கது கிரவுன் வடிவில் அமைந்த மற்றொரு பதிப்பு; 242 பக்கங்கள் கொண்டது. இந்தப் பதிப்பிலும் எ, ஒ எழுத்துக்கள் புள்ளியிட்டுப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. தாண்டவராய முதலியார் பதிப்பில் புதிய சூத்திரங்கள் உடுக்குறி இட்டுக் காட்டியபடி இப்பதிப்பும் உள்ளது. எனவே தாண்டவராய முதலியார் பதிப்பின்படியே அந்நூல் வெளிவந்த அடுத்த ஆண்டிலேயே 1940-இல் இப்பதிப்பு வந்துள்ளது.

பிரிட்டிஷ் மியூசியம் கேட்லாக்கிலிருந்து திவாகரரின் திவாகரம் T. குப்பன் அய்யங்கார் என்பவரால் சென்னையி லிருந்து 1859-இல் பதிக்கப் பெற்ற விவரம் தெரிய வருகிறது.

1886-இல் தஞ்சாவூர் சின்ன கன்னைய செட்டியார் என்பவ ரால் சென்னையில் வெளியிடப்பட்ட பதிப்பு ஒன்றுள்ளது. இதன் முதற்பக்கத்தில் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது.

உ

கடவுள் துணை

சேந்தன் திவாகரம் மூலபாடம்.

இஃது

சென்னைக் கல்விச் சங்கத்துத்

தமிழ்த் தலைமைப் புலமை நடத்திய

தாண்டவராய முதலியார்

அவர்களால் பதிப்பித்த

பத்துத் தொகுதிகளின் மூலத்தோடு

சங்க வித்துவான்களால்

பதிப்பித்த

மற்றவிரண்டு தொகுதிகளின் மூலத்தையும்

ஒன்றாகச் சேர்த்து

சிவாத்துவித சித்தாந்தியாகிய

திருமழிசை

முத்துசாமி முதலியாரவர்களால்
அவைகட் கிணங்கப் பரிசோதித்து
தஞ்சாவூர்
சின்ன கன்னைய செட்டியாரால்
தமது
சகலகலா நிலைய அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது
1886.

இதற்குப் பின் வந்த பதிப்புகளின் முதற் பக்கத்திலும் பதிப்பாசிரியர் அச்சுக்கூடப் பெயர்கள் வேறுபட்ட போதிலும், 'இஃது சென்னைக் கல்விச் சங்கத்து' என்பது தொடங்கி, 'மற்ற இரண்டு தொகுதிகளின் மூலத்தையும் ஒன்றாகச் சேர்த்து' என்பது வரையுள்ள குறிப்பு அப்படியே காணப்படுகிறது. ஆதலால், பின் வந்த பதிப்பாசிரியர் எல்லோருமே முந்திய பதிப்பை அப்படியே பின்பற்றி வந்திருக்கிறார்கள் என்பது தெரிய வருகிறது எனினும் முற்பதிப்பில் புதுச் சூத்திரங்களுக்குக் காட்டப்பட்ட உடுக்குறியைக் கைவிட்டு விட்டனர். இதனால் எவை எவை திவாகரரின் சூத்திரம், எவை எவை தாண்டவராய முதலியார் உள்ளிட்ட கல்விச் சங்கத்து வித்துவான்கள் சேர்த்த சூத்திரம் என்பது தெரியாமல் ஆகிவிட்டது.

திவாகரத்தின் பதினொன்றாம் தொகுதியாகிய ஒரு சொல் பல பொருள் பெயர்த் தொகுதியின் அமைப்பு முறை தனிப்பட நோக்கத் தக்கது. திவாகரர் சொற்களை எதுகை முறையில் அமைத்துப் பொருள் கூறிய சூத்திர அமைப்பு முறையை முதற் பதிப்பிலேயே மாற்றி அச்சிட்டது ஒரு பெருங்குறையாகும். இத் தொகுதிச் சூத்திரங்களை ஆதியிற் பொருள், அந்தத்துப் பொருள் என்று இரு கூறுபடுத்தி ஒவ்வொரு பகுதியிலும் சூத்திரங் களைச் சொற்களின் அகராதி அடைவில் அமைத்து வெளியிட் டுள்ளார், இம்மாற்றத்தை முதற்பதிப்பாசிரியரே செய்தார் என்று சொல்வதற்கும் இல்லை. கொல்லம் 877-இல் அதாவது கி.பி, 1702-இல் எழுதப் பெற்ற ஏட்டுப் பிரதியிலேயே இம்முறை காணப்படுகிறது என்பதைப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.[1] இதற்கும் எத்தனை ஆண்டு களுக்கு முன் இத்தகைய மாறுதல் ஏற்பட்டது என்பதை வரை யறுப்பதற்கு உரிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும் அகராதி நிகண்டு பழக்கத்திற்கு வந்த 16 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே இம் மாற்றம் ஏற்பட்டிருத்தல் கூடும். திவாகரர் அமைத்த முறையில் பதினோராம் தொகுதி இது வரையில் அச்சிடப் பெறவில்லை. இந்த ஆய்வுப் பதிப்பில்தான் முதன்

---

1. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கிய மணிமாலை, பக். 157.

முதலாக ஆசிரியர் அமைத்த முறையில் ஏடுகளைப் பரிசோதித்து இத் தொகுதி வெளியிடப்பட்டிருக்கிறது என்பது குறிப்பிடத் தக்கது

1896க்குப் பின்னும், 1897-இல் சென்னை குருநாத சுவாமிகளின் பதிப்பு வந்துள்ளது. இந்த நூற்றாண்டில் கோ. லோகநாத முதலியார் 1904-இல் தமது மனோன்மணி விலாச அச்சுக் கூடத்தில் ஒரு பதிப்பு வெளியிட்டுள்ளார். பின்னரும், 1917 1924 முதலிய ஆண்டுகளிலும் இவ்வச்சுக்கூடப் பதிப்பு தொடர்ந்து வெளிவந்துள்ளது.

திருப்போரூர், டி. கோபால நாயகர் அவர்களின் சென்னை கோல்டன் எலெக்டிரிக் பிரஸ்ஸில் 1923-இல் ஒரு பதிப்பு வெளிவந்துள்ளது. 1958-இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் பதிப்பு வெளியாகியுள்ளது. இதுவே இப்போது கிட்டும் அச்சுப் பதிப்பு ஆகும்.

திவாகரத்தின் முதல் தொகுதியாகிய தெய்வப் பெயர்த் தொகுதி மட்டும் 1868-இல் ஊ. புஷ்பரதச் செட்டியாரால் பதிப்பிக்கப்பட்டது. பின்னரும் பல பதிப்புகள் இத் தொகுதிக்கு வந்துள்ளன. ஏறத்தாழச் சென்ற நூற்றாண்டில் மட்டும் 11 பதிப்புகள் வந்தமை தெரியவருகிறது. சொற்பொருள் உணர்த்தும் சூடாமணி நிகண்டின் 11 ஆம் தொகுதியைப் பலரும் மனப்பாடம் செய்து வந்தது போல இத்தொகுதியையும் மனப்பாடம் செய்யும் பழக்கம் இருந்து வந்திருக்க வேண்டும். 1927-இல் மணி திருநாவுக்கரசு முதலியார் பதிப்பு ஒன்று இத் தொகுதிக்கு உள்ளது. அதன் நூன்முகத்தில், 'இந்நூலின் முதற்பகுதி எல்லாப் பள்ளிகளிலும் வழி வழி படிக்கப்பட்டு வருதலின் இதனை அச்சிட்டோம்' என்று குறிப்பிட்டுள்ளார்கள். பள்ளிப் பாடமாய் வழங்கியமையால் இத்தொகுதிக்கு மேலும் பல பதிப்புகள் அவ்வப்போது வெளிவந்திருத்தல் வேண்டும். அவற்றின் விவரம் வருமாறு :

## திவாகரப் பதிப்பு விவரம்

| | பரிசோதகர் | பதிப்பாசிரியர் ஆண்டு |
|---|---|---|
| 1. திவாகரம் (முதல் 10 தொகுதி) | தாண்டவராய முதலியார் | கொற்றமங்கலம் இராமசாமிபிள்ளை |
| | பு. நயநப்ப முதலியார் | தி. விசாகப்பெருமாளையரது கல்வி விளக்க அச்சுக்கூடம், சென்னைப் பட்டணம் |

| | | | |
|---|---|---|---|
| 2. | திவாகரம் 12 தொகுதிகளும் | பு. நயநப்ப முதலியார் | 181. |
| 3. | ,, | டி. குப்பன் | காண்க: பிரிட்டிஷ் மியூசியம் காட்லாக் (பக்கம் 98) |
| 4. | ,, | திருமழிசை முத்துசாமி முதலியார் | தஞ்சாவூர் சின்ன,கன்னைய செட்டியார் சகலகலா நிலைய அச்சுக்கூடம் சென்னை |
| 5. | ,, | குருநாத சுவாமிகள் | கோ. லோகநாத முதலியார் 1904 மனோன்மணிவிலாச அச்சுக்கூடம் (மறுபதிப்பு 1917, 1924,) |
| 6. | ,, | ,, | திருப்போரூர் கோபால் நாயகர், 1923 கோல்டன் எலக்டிரிக் பிரஸ், சென்னை. |
| 7. | ,, | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1958 | |

தெய்வப் பெயர்த் தொகுதி மட்டும் காலந்தோறும் பல பதிப்புகளைப் பெற்றன. அவற்றின் விவரம் வருமாறு:

1. ஊ. புஷ்பரதச் செட்டியார், கலாரத்நாகர அச்சுக்கூடம். சென்னை, 1968.
2. கருணானந்தசுவாமிலு கேசவ முதலி, சென்னை, 1876
3. அப்பாசாமி முதலியார், இலக்கிய விளக்க அச்சுக்கூடம் 1873,
4. சி. நாராயணசாமிமுதலியார், பிரபாகர பிரஸ், சென்னை, 1874
5. அருணாசல முதலியார், மனோன்மணி விலாச அச்சுக்கூடம், 1878
6. ஆறுமுக சுவாமிகள், பரப்பிரம முத்திராட்சிர சாலை, 1879
7. டி. பரசுராம முதலி, பரபிரம்ம அட்சியந்திர சாலை, 1880
8. அப்பன் செட்டியார், சிவானந்த நிலைய அச்சுக்கூடம் 1881
9. அப்பாசாமி முதலியார், மீனாட்சியம்மை கலாநிதிபிரஸ் சென்னை, 1888

10 சுப்பிரமணிய சுவாமிகள், ஸ்ரீநிலையம் அச்சுக்கூடம், சென்னை, 1889

11. ஷ. புஷ்பரதச் செட்டியார், கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை, 1889

12. சுப்பிரமணிய சுவாமிகள், ஸ்ரீ நிலைய அச்சுக்கூடம், 1889

13. மணி திருநாவுக்கரசு முதலியார், வாவிள்ளா பிரஸ், சென்னை, 1927

## திவாகரம் - ஆய்வுப் பதிப்பு

### நிகண்டுகள்

தமிழ் மொழியில் தேர்ச்சி பெற நிகண்டு கற்பது மிகவும் இன்றியமையாததாக முன்பு கருதப்பட்டு வந்தது. இலக்கணம் போலவே இதுவும் ஓர் இன்றியமையாத கருவி நூலாகும். இந்நாளில் சொற்பொருள் அறிதற்குக் கருவியாய் விளங்கும் அகராதிகளின் நிலையில் எழுந்தனவே காலந்தோறும் தோன்றிய நிகண்டுகள்.

### முதல் நிகண்டு

நிகண்டுகளுள் முதலில் தோன்றியதும் காலத்தால் முற்பட்டதுமான நூல் திவாகரம். இதன் பின்வந்த நிகண்டுகளுள் இதனை ஒப்பச் சிறப்பாக போற்றப்படுவது இதனை அடுத்துப் பிறந்த பிங்கலம். பிற்கால நிகண்டுகளுள் மண்டல புருடரின் சூடாமணி சிறப்பிடம் பெற்றது. இம் மூன்று நிகண்டுகளுள் பவணந்திமுனிவர் தாம் இயற்றிய நன்னூலில் பிங்கலம் ஒன்றையே குறிப்பிட்டனர். ஆயினும் அதன் உரைகாரராகிய சங்கரநமச்சிவாயப் புலவர் இம்மூன்று நிகண்டுகளையும் பிங்கலம் திவாகரம், சூடாமணி என்னும் வரிசையில் ஒருசேரக் குறிப்பிடுகிறார் (நன்.460 உரை).

கற்றோர் சிறப்பு நிலையில் வைத்துப் போற்றும் இம்மூன்று நிகண்டுகளுள்ளும் திவாகரமும் சூடாமணி நிகண்டுமே முன்னாளில் மிகுதியாகக் கற்று மனனம் செய்யப்பட்டு வந்தன. இவ்விரண்டு நிகண்டுகளுக்கும் கிடைத்து வரும் ஏட்டுப்பிரதிகளின் பெருக்கமே இதற்குச் சான்றாகும்.

### மாற்றங்கள்

திவாகரம் கல்வி பயில்வாரிடையே செல்வாக்குப் பெற்றுத் தமிழகம் எங்கணும் உலவி வந்த நூலாதலால் ஏட்டுப்பிரதிகளில் நேர்ந்த மாறுபாடுகள் பலவாயின. சுவடிகள் கிடைக்கும்

...த்திற்குத் தக்கவாறு நூற்பாக்களின் அமைப்பு முறையிலும் பாடங்களிலும் வேறுபாடுகள் மிகுதியாயின. அன்றியும் பின் வந்தோரும் சிற்சில பொருள்கள் குறித்த நூற்பாக்களை இடையிடையே சேர்த்தும் வந்துள்ளனர். இத்தகு பெருமாற்றம் காலப்பழமையான ஏடுகளில் இல்லை. பிற்பட்ட ஏடுகளில் மாற்றங்கள் மிகுதி. இவற்றையெல்லாம் திவாகரத்தை முதன் முதலாக அச்சில் பதிப்பித்தவர்கள் கண்டு தெளிந்து நீக்கித் திவாகரர் செய்த நூற்பாக்களை மட்டும் தர முயன்றிலர். மாறாக முதற் பதிப்பாசிரியர் சென்னைக் கல்விச் சங்கத்தைச் சார்ந்த தாண்டவராய முதலியாரும் பு. நயநப்ப முதலியாரும் தாமே பல புது நூற்பாக்களை இயற்றித் திவாகரர் நூற்பாவுடன் கலந்து அச்சியற்றியுள்ளனர். இவர்களுக்குப் பின் வந்த பதிப்பாசிரியர்களோ இப்பதிப்பாசிரியர் சேர்த்த புதுநூற்பாக்களையும் திவாகரர் வாக்குடன் ஒருசேர வேறுபாடின்றிக் கலந்து அச்சிட்டு வெளியிட்டனர்.

### நிகண்டுப் பயிற்சி

கல்வி முறையில் மாற்றமும் அகராதிகள் பலவகை அச்சில் வெளிவரத் தொடங்கியதும் நிகண்டுகளைப் போற்றுவார் தொகை வரவரக் குறையக் காரணமாயின. காலந்தோறும் தோன்றிய புதுச்சொற்களையும் பொருள் மரபுகளையும் அறிய இவை உதவும் என்பதனையும் மறந்தனர். இதனால் நிகண்டுப் பயிற்சி இருபதாம் நூற்றாண்டில் மிகவும் குறைந்துவிட்டது. எனவே, அவற்றைப் போற்றுவார் தொகையும் அருகி வருதல் இயல்புதானே? இன்றும் அச்சிடப் பெறாது ஏட்டுச் சுவடியாயிருக்கும் நிகண்டுகளும் பல உள.

### நிகண்டு நூல்களின் அறிமுகம்

தமிழில் உள்ள நிகண்டு நூல்களை இந்நூற்றாண்டின் முற்பாதியில் அறிமுகம் செய்து வைத்தவர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியின் பதிப்பாசிரியராக விளங்கிய வையாபுரிப்பிள்ளை அவர்கள் ஆவர். தமிழகராதியாக்கத்திற்கு முன்வந்த நிகண்டு நூல்கள் ஆதாரமாய் விளங்குதலை நன்கு உணர்ந்த இவர்கள், 'தமிழகராதியின் ஆதார நூற்றொகுதி' என்னும் வரிசையில் நான்கு நிகண்டுகளைப் பதிப்பித்துமுள்ளார்கள். அவை நாமதீப நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதரம், அரும்பொருள் விளக்க நிகண்டு என்பனவாம். இவர் பதிப்பிக்கத் தொடங்கிய கைலாச நிகண்டு சூளாமணியும், பிங்கல நிகண்டும் முதலில் சிறிதளவே அச்சாயின.

### திவாகரப் பதிப்புகளின் நிலை

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் தாம் பதிப்பித்த கயாதர நிகண்டு முன்னுரையில் திவாகரப் பதிப்புப் பற்றிக் கூறியுள்ள மதிப்பீடு பின்வருமாறு:

நிகண்டுகளனைத்தினும் காலத்தால் முந்தியது திவாகரமாகும். இந்நூல் இன்றுகாறும் திருத்தமாகப் பதிப்பிக்கப் பெறவில்லை பிரதி செய்தோரால் நேர்ந்த பிழைகள் ஒருபுறமிருக்கப் பலசூத்திரங்கள் பிற்காலத்தாசிரியர்களால் சேர்க்கப் பட்டும் சூத்திரவைப்பு முறைமாற்றப்பட்டும்இருத்தலின் திவாகரத்தின் மூல வடிவம் இன்னதென்றுணர்வதுஅரிதினுமரிதாய் முடிந்தது. இந்நூலை முதன்முதற் பதிப்பித்த வித்துவான் தாண்டவராய முதலியாரவர்களும் தாமே பல சூத்திரங் களைப் புதியனவாக இயற்றிச் சேர்த்து அச்சிடுவித்தார்கள். இவ்வாறு புதுக்கிய திவாகரமே இப்போது வழங்குவது ஆகவே, ஆராய்ச்சியாளருக்குச் சிறிதேனும் பயன்படக் கூடிய நிலைமையில் இந்நூல் இல்லை.

(முன்னுரை, பக். XV-XVI)

இம்மதிப்பீட்டிலிருந்து இந்நூலின் அச்சுப்பிரதி எத்துணையளவு குறைபாடுடையது என்பது விளங்கும். பேராசிரியர் வெளியிட்ட வேறு நூல்களிலும் இந்நிகண்டின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருந்திய பதிப்பு வேண்டும் என்பதை வற்புறுத்தி வந்துள்ளார். தாமே பல திவாகர ஏட்டுச் சுவடிகளைத் தொகுத்து ஆராய்ந்து பாடபேதங்களைக் குறித்து வந்தார்கள். இதனைச் சீரிய முறையில் பதிப்பிக்க வேண்டும் என்றும் திட்டமிட்டிருந்தார்கள். எனினும் பல சூழல்களால் அவர்கள் வாழ்நாளில் அப்பதிப்பு முயற்சி ஈடேறாமல் போயிற்று.

## திவாகர ஏட்டுச்சுவடிகள்

திவாகர நிகண்டின் ஏட்டுச் சுவடிகள் நம் நாட்டின் பல பாகங்களிலும் சிதறுண்டு பிரிந்து கிடப்பதால் அவற்றை உரிய இடங்களுக்குச் சென்று பரிசோதிக்க இயலாமற் போயினும் முக்கியமான குறிப்புகள் இயன்றவரையில் திரட்டப்பட்டுள்ளன. கிட்டிய ஏடுகளுள் பழமையான ஏடுகள் முற்றுமாய்ப் பார்வையிடப்பட்டன. ஏனைய சுவடிகளின் பொது நிலைமையை ஆய்ந்து அவற்றிலிருந்து கிடைத்த சிறப்புச் செய்திகளையும் தொகுக்க இயன்றது. திவாகரத்துள் மாறுபாடுகள் நேர்ந்த இடங்கள் எல்லாம் சரிவர ஆராய்ந்து கண்டுபிடிக்கப் பெற்றன.

திவாகரச் சுவடிகள் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நிலையம், தஞ்சாவூர் சரசுவதிமகால், கல்கத்தாத் தேசிய நூலகம், சென்னை டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம், மதுரைத் தமிழ்ச் சங்கம் முதலிய இடங்களில் உள.

## ஒப்பு நோக்கப் பயன்படுத்திய மூலப்படி

அச்சுப் புத்தகம் ஏட்டுச் சுவடிகளிலிருந்து மிகுதியும் மாறுபட்டுள்ளமையால் அதனை ஒப்புநோக்குதற்குரிய மூலப்படியாகக்

கொள்ளவில்லை. பழைய ஏட்டுப் பிரதி ஒன்றைப் பார்த்துப் பிரதி செய்த காகிதப் பிரதியே மூலப்படியாக வைத்துக் கொள்ளப் பெற்றது. இதற்குப் பயன்பட்ட பழைய ஏடு அறிஞர் மு. அருணாசலம் அவர்களால் வழங்கப் பெற்றது. முழுமையா யுள்ளது. இவர்கள் தந்த மற்றொரு குறையேடும் பழமை யானதே.

**இப்பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகள்**

தனிப்பட்டோர் தொகுப்புகளில் அடுத்துக் குறிப்பிடத் தக்கது வேலம்பாளையம் பெரும்புலவர் தெய்வ சிகாமணிக் கவுண்டர் அவர்களுடையது. அவர்களுடைய ஏட்டுத் தொகுப்பு கள் எல்லாம் இப்பொழுது பாதுகாக்கப்பட்டுவரும் கோயம்புத் தூரையடுத்த பேரூர் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியி லிருந்து அப்பிரதி கிட்டியது. இவ்வாறே தனிப்பட்ட பழம் புலவர் சிலரிடத்தும் திவாகரப் பிரதிகள் இருத்தல் கூடும்.

பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் திவாகர அச்சுப் புத்தகத்தில் இடையிடையே காகிதங்கள் வைத்துப் பைண்டு செய்து சென்னை அரசாங்கச்சுவடி நிலையத்திலும் பிற இடங்களிலும் இருந்து பெற்ற பல ஏட்டுச் சுவடிகளைப் பரிசோதித்துப் பாடபேதங்கள் குறித்து வைத்திருந்தனர். அவர்கள் குறித்த பாடபேதக்குறிப்புகளும் ஆராய்ந்து உரிய இடங்களில் சேர்த்துக் கொள்ளப்பட்டன,

பேராசிரியரைப் போன்றே அகராதித்துறையில் முன்பு பணி யாற்றிய பேராசிரியர் மு.இராகவையங்கார் அவர்களின் திவாகர கையெழுத்துப் பிரதியும் பெரிதும் பயனுடையதாயிற்று. ஐயங்கார் அவர்கள் பல சுவடிகளை ஒப்பு நோக்கிச் செம்மை யான மூலபாடம் கண்டு, தமக்குக் கிட்டிய பாடபேதங்களையும் குறிப்புகளுடன் உடன் தந்து 1922ஆம் ஆண்டிலேயே பதிப் பிடத் தக்கதாக எழுதி வைத்திருந்த பிரதியாகும் இது. இவர்கள் பிரதியுடன் தொகுத்த பாடபேதக் குறிப்புகளையும் உடன் வைத்து ஆராய்ந்து இப்பொழுது செம்மையான பாடங்கள் தீர்மானிக்கப்பட்டன.

பழைய சுவடியைப் பார்த்து எழுதிய மூலப் பிரதியுடன் ஒவ்வோர் இடங்களிலுமுள்ள சுவடிகள் ஒப்பு நோக்கி ஆராயப் பட்டன. முதன் முதலாக வெளிவந்த திவாகரப் பதிப்புகள் (1839, 1940) பதிப்பு நூல்களுள் முதன்மையாகக் கொள்ளப் பட்டன. இவற்றிலும் மாறுபட்ட சிற்சில குறிப்புகள் பிற்பதிப்புகள் நோக்கியும் எடுத்தாளப்பட்டன.

ஏட்டுச்சுவடிகள் முதலில் வந்த அச்சுப்படிகள் ஆகியவற்றின் பரிசோதனையால் திவாகரர் அமைத்த மூலத்தின் முன்னிருந்த

நிலைமையும் பிற்கால ஏட்டுப் பிரதிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் உகுந்த இடைச் செருகல்கள் மாறுபாடுகள் முதலியனவும் தெரிய வந்தன. இவற்றையெல்லாம் வேறுபடுத்தி இனம் பிரித்து இப் புதிய பதிப்பில் அமைத்துள்ளோம்.

### திவாகர நூல் அமைப்பு

திவாகரம், தெய்வப் பெயர்த் தொகுதி முதல் பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி வரையில் 12 தொகுதிகள் கொண்டது. ஒவ்வொரு தொகுதியும் ஆசிரியர் வரலாறும் நூல் வரலாறு சுட்டும் நூற்பாவுடனும் முடிவுறுகிறது. இவற்றால் அம்பர் என்னும் ஊரில் வாழ்ந்த சேந்தன் என்பானின் ஆதரவில் திவாகரர் என்பவரால் இயற்றப்பட்டது என்பது தெளிவாகும்.

திவாகரர் ஒவ்வொரு தொகுதியிலும் தாம் எண்ணித் திட்ட மிட்டவாறு பொருள்களைக் குறித்து ஒரு வரிசை முறையில் வைத்து நூற்பாக்களை இயற்றியுள்ளார். சந்திப் பிணைப்புடன் பழைய முறையில் நூற்பா யாப்பில் தம் நூலை ஆக்கியுள்ளார். நூற்பாக்களுக்கு எண்ணிட்டுப் பிரித்துக் காட்டவும் இல்லை. பொருள் தலைப்புகள் எதுவும் தரப்பெறவுமில்லை. பழமையான ஏடுகள் இவ்வாறே அமைந்துள்ளன. பின் வந்த ஏட்டுச் சுவடி களிலும் சந்திப் பிணைப்புகள் சரிவரப் பின்பற்றப்படவில்லை. ஒவ்வொருவரும் தாம்தாம் கருதியவாறு சந்திபிரித்த நிலையில் எழுதியுள்ளனர். தேசிய நூலகத்தில் (கல்கத்தா) உள்ள ஓர் ஏட்டில் மட்டுமே ஒவ்வொரு தொகுதி நூற்பாக்களுக்கும் எண் குறிப்புத் தரப்பட்டுள்ளது.

### பொருள் — தலைப்பு

நூற்பாக்களுக்குப் பொருள் — தலைப்பிட்டு எழுதும் முறையும் பின் வந்த ஏடுகளில் காணப்பெறுகின்றது. இந்தத்தலைப்புகளும் ஒரே முறையில் இல்லை. தலைப்புப் பெயர்கள் சுட்டுவதிலும் ஏட்டுக்கு ஏடு மாறுபாடு உண்டு, எனவே தலைப்பிட்டு எழுதும் முறை பின்னாளில் புகுந்ததேயாம், தலைப்புகள் ஏடுப்பிரதி களிலேயே இடம் பெற்றுவிட்டமையாலும் பொருள் தெளிவிற்கு அவை துணைசெய்யுமாதலாலும் இப்புதிய பதிப்பில் தலைப்புகள் சேர்த்துக் கொள்ளப்பெற்றன.

### கடவுள் வணக்கப் பாடல் இன்மை

திவாகரர் தெய்வப் பெயர்த் தொகுதியில் நூலைத் தொடங்கிய காரணத்தால் ‘கடவுள் வாழ்த்து’ என ஒன்றை அவர் முதலில் அமைத்திலர் போலும். பின்னாளில் ஏடெழுதி யோர்,

தந்தி முகத் தெந்தைச் சதங்கைப் பதம் போற்றிச்
சிந்தை விளங்காத் திவாகரத்துள்—வந்த
தொகுத்யொரு பன்னிரண்டும் சோராமல் நேரே
பகுதியுற மனமே பற்று

என விநாயகர் துதியான பாடல் ஒன்றைச் சேர்த்துவிட்டனர். இப்பாடல் எழுதப் பெறாத சுவடிகளும் உள. இப்பாடலை நூல் முகப்பில் எழுதினோரும் தனியேட்டில் நூலுக்குப் புறம்பாயோ, அல்லது தனிப்பக்கத்திலோ தந்து திவாகர நூலைத் தொடங்கி யுள்ளனர். மேலும் இப்பாடலுடன் பல ஏடுகளிலும் பொதுவாய்க் காணப்பெறும் 'தவளத் தாமரை', 'வெள்ளை வாரணப் பிள்ளையார்', 'பொத்தகம் படிகமாலை' என்று தொடங்கும் பாடல்களும் சில ஏடுகளில் உடன் எழுதப்பட்டுள்ளன. ஆழ்வார் திருநகரி ஏடுகளில் 'தேனாறு தொடையலும்' எனத் தொடங்கும் நம்மாழ்வார் துதிப்பாடல் காணப்படுகிறது. குறிப்பாகச் சில பழைய ஏடுகள் இவ்வகைப் பாடல்கள் எதுவும் இன்றியே உள்ளன என்பது சிந்தனைக்குரியதாம். பாடல் போக்கும் இந் நூலைக் கற்றுப் போற்ற விழையும் ஒருவரின் வாக்காக உள்ளது. எனவே, அச்சுப் புத்தகங்களில் காணப்படும் இப்பாடல் ஆசிரியர் வாக்கன்று என்பது தெளிவாயிற்று.

### நூற் பெயர்

நூலின் பெயரைச் 'சேந்தன் திவாகரம்' என்று முதற் பதிப் பாசிரியர் கொண்டுள்ளார். பின் வந்த பதிப்புகளும் இவரைப் பின்பற்றியுள்ளன, ஏடுகளை நோக்கும்போது இப்பெயரால் குறிப்பிட்ட ஏடுகள் விரல்விட்டு எண்ணக் கூடிய அளவில் நான் கைந்தே உள. எல்லாப்பிரதேசங்களிலும் உள்ள பெரும் பான்மை ஏடுகளும் 'திவாகரம்' என்றே நூற்பெயரைக் குறிப்பிட் டுள்ளன. ஆகவே திவாகரம் என்பதுவே இந்நூலின் பெயர் என்பதும் திவாகரர் என்னும் ஆக்கியோன் பெயரால் இந்நூற் பெயர் அமைந்துள்ளது என்பதும் தெளிவாம்.

### திவாகர முதல் நூற்பா

திவாகரத்தின் முதல் நூற்பா அச்சுப் பிரதிகளில், 'சங்கரன் இறையோன் காமதகனன்' எனச் சிவன் பெயரில் தொடங்கு கிறது. பழமையான ஏடுகள் எனக் கருதத் தக்கவை சில 'அளகன் அசலன் அதிகுணன் அபயன்' எனத் தொடங்கும் அருகன் பெயர் தரும் நூற்பாவை முதலாகக் கொண்டுள்ளமை தெரிய வந்தது. மேலும், ஆழ்வார் திருநகரி முதலிய இடங்களில் உள்ள பிற சமயத்தார் எழுதிய ஏடுகளும் அருகன் பெயர் தொடங்கியே காணப்படுகின்றன. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர் களின் கையெழுத்துப் பிரதியும் பேராசிரியர் மு. இராகவையங்கார் பிரதியும் அருகன் பெயர் தொடங்கியே எழுதப்பட்டுள்ளன. ஆதலால், அருகன் பெயர்த் தொடக்கமாக இருந்த நிலைமை

பிற்காலத்தேதான் மாறியிருத்தல் வேண்டும் என்பது இங்குக் கருதத்தக்கது.

**நூலமைப்பு**

முதல் பத்துத் தொகுதி-தெய்வப் பெயர் முதல் ஒலிபற்றிய பெயர்வரையில்-பொருள் முறையில் பகுத்துத் தரப்பட்டுள்ள பகுதிகளாகும். பதினோராம் தொகுதி ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களையும் தொகுத்துத்தருகிறது. அகராதியில் போலச் சொற்பொருள் அறிதற்கு இத்தொகுதி துணைநிற்கிறது. இத் தொகுதி நூற்பாக்களை நினைவில் வைத்துக் கொள்ளக்கூடிய வகையில் எதுகை முறையில் சொற்களின் தொடர்நிலை அமைய ஆசிரியர் ஆதியில் அமைத்திருந்தார். மேலும் சொல்லை நூற்பாவில் முதலில் வைத்து உரிய பொருள்களைத் தெரிவித்தலும், பொருள்களை முதலில் சுட்டி ஈற்றில் உரிய சொல்லை வைத்தும் இப்பகுதி நூற்பாக்கள் அமைக்கப்பட்டுள்ளன. எதுகை முறையில் நூற்பாக்களைத் தொடர்பு பெற அமைத்தல் மனனம் செய்வதற்குத் துணைபுரிவதாகும். ஆசிரியரின் இம் முறைவைப்பு அகராதி போல எளிதில் பயன் படுத்த இயலா நிலைமையில் உள்ளது.

**பதினோராம் தொகுதி மாறுபடுகை**

கி.பி. 1594 இல் சிதம்பரம் இரேவண சித்தரின் அகராதி நிகண்டு ஆக்கப் பெற்றது. இது அகரவரிசையில் சொற்பொருள் விளக்கும் நூல். இந்நூல் நாட்டில் பரவியபின் பிற நிகண்டுகளையும் அகராதி முறையில் அமைக்கும் எண்ணம் கல்வியாளர்களிடையே தோன்றியிருத்தல் வேண்டும். இதன் விளைவாகத் திவாகரத்தின் பதினோராம் தொகுதியை மாற்றியமைக்கும் முயற்சியும் தோன்றியிருக்கலாம்.

ஆசிரியர் திவாகரர் அமைத்த பழைய முறையை விடுத்து 11ஆம் தொகுதி நூற்பாக்களை ஆதியிற்பொருள், அந்தத்துப் பொருள் என இரு கூறுபடுத்தினர். சொல் முதலிலும் பொருள் தொடர்ந்தும் வருவதனை ஆதியிற்பொருள் என்றும்,பொருளைத் தொடர்ந்து இறுதியில் சொல்நிலைபெறும் நூற்பாக்களை அந்தத்துப் பொருள் என்றும் கொண்டனர். ஒவ்வொரு பகுதியிலும் அமைந்த நூற்பாக்களுள் விளக்கப்பெறும் சொற்களின் அகராதி அமைப்பில் அவற்றை மாற்றி அமைக்கலாயினர். இவ்வகை அமைப்பில் எழுதப்பெற்ற ஏடுகளுள் கி.பி. 1702 ஆம் ஆண்டு எழுதப் பெற்ற ஏடு காலத்தால் முந்தியதாகத் தெரியவருகின்றது. இந்த வகையில் அமைந்த ஏடுகளும் பலவாய்க் காணப்படுகின்றன. தேசிய நூலகத்தில் உள்ள ஏடுகளில் ஏழும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் ஓர் ஏடும் இம்முறைமையில் அமைந்துள்ளன.

### இடைச்சொற்களைத் தெளிவுபடுத்தல்

முதன்முறையாகத் திவாகரத்தை அச்சிட்ட சென்னைக் கல்விச் சங்கத்து வித்துவான்கள் ஆதியிற்பொருள் அந்தத்துப் பொருள் முறையினைப் பின்பற்றி அச்சிட்டுள்ளனர். ஏடுகளில் அகரவரிசை முதலெழுத்தளவில் அமைய அச்சுப்பகுதியில் அகர வரிசை சீர்செய்யப்பட்டு அதற்கு ஏற்ப நூற்பாக்கள் மாற்றித் தரப்பட்டுள்ளன. சில ஏடுகளில் பதினொராந் தொகுதி நூற்பாக் களில் விளக்கம் பெறும் சொற்கள் அனைத்தையுமே அகராதி முறையில் வைத்து அதற்குத்தக நூற்பாக்களும் மாற்றி அமைக்கப்பட்ட ஏடு ஒன்றும் தேசிய நூலகத்தில் காணப்பெறு கின்றது. பேராசிரியர் மு. இராகவையங்கார் தாம் எழுதிய கையெழுத்துப் பிரதியில் முற்றும் அகராதியாய் அமைந்த முறை யிலேயே இத்தொகுதியை அமைத்துள்ளார். எனவே இம்முறை யிலும் சில ஏடுகள் நாட்டில் வழங்கி வந்தன என்பது தெரிய வரும்.

### ஆசிரியர் அமைத்த முறை

மேலே சுட்டப்பெற்ற அகராதிமுறை வைப்பும், அச்சுப் பிரதிகளில் காணும் ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் அமைப்பு முறையும் திவாகரர் அமைத்த முறையினின்று மாறு பட்டனவாம். ஆசிரியர் அமைத்த பழைய முறையிலேயே பெரும்பான்மை ஏடுகளும் உள்ளன. இவ்வகை அமைப்புமுறை இன்னும் அச்சில்வாராத ஒன்றாகும். ஆசிரியர் ஆதியில் அமைத் திருந்த நூற்பா முறை இத்தகையது என்று ஆய்ந்து இப்பதிப்பு உருவாக்கப்பட்டுள்ளது.

### இடைச் செருகல்களைத் தெளிவுபடுத்தல்

முதற்பதிப்பாசிரியர் தாண்டவராய முதலியாரும் (முதல் 8 தொகுதிகள்) பு. நயநப்ப முதலியாரும் (9, 10 தொகுதிகள்) தாம் தாம் இயற்றிச் சேர்த்துப் பதிப்பித்த புதிய நூற்பாக்க ளுக்கு உடுக்குறியிட்டுப் பதிப்பித்தனர். சென்னைக் கல்விச் சங்கத்தார் வெளியிட்ட 11, 12 ஆம் தொகுதிகளில் பதிப்பாசிரிய ரால் புது நூற்பாக்கள் எதுவும் சேர்க்கப்படவில்லை. முதல் பத்துத் தொகுதியிலுமாக 280 நூற்பாக்களை இவர்கள் சேர்த் துள்ளனர் என்பது தெரியவருகிறது.

இப் புதிய பதிப்பில் இவை உரிய இடங்களில் தனிப்பட முன்பு போலவே உடுக்குறியிட்டு அமைத்துக்கொள்ளப்பட்டன. நூற்பகுதியிலிருந்து இவை வேறுபடுத்தியும் காட்டப்படுகின்றன.

பதிப்பாசிரியர் புதுச் சூத்திரங்களை இடையிடையே சேர்த் தது போன்றே ஏட்டுப்பிரதிகள் சிலவற்றிலும் சிற்சில இடங்களில் இடைச் செருகல்களாகப் புது நூற்பாக்கள் காணப்படுகின்றன இவ்வாறு காணப்பெற்ற நூற்றுக்கு மேற்பட்ட நூற்பாக்களும்

உரிய இடங்களில் தனிக்குறிப்புடன் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன.

## நூற்பா அமைப்பைத் தெளிவுபடுத்துதல்

திவாகர நூற்பாக்களுள் இருசீர் கொண்டமைந்த குறளடி நூற்பாக்களும் பலவாகும். இந்தகைமைத்தாய் வரும் நூற்பாக்களுள் அடுத்தடுத்துவரும் நூற்பாக்கள் இரண்டனை இணைத்து நாற்சீர் நூற்பாவாகவும் ஏடுகள் சிலவற்றில் அமைக்கலாயினர். இவ்வாறு அமைக்கப்பட்டுள்ள இடங்களும் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இதுவும் பின்னாளில் நேர்ந்த மாற்றமே ஆகும். இவ்வாறாக நூற்பா அமைப்பில் நேர்ந்த மாறுபாடுகள் எல்லாம் தக்க வகையில் அமைத்து இப்பதிப்பில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

ஏடுகள் சிலவற்றில் ஒவ்வொரு பொருளுக்கும் உரிய பெயர்களின் எண்ணிக்கை ஆக இந்தனை என எண் குறிப்பிற் சுட்டியுள்ளனர். இதனை முதற்பதிற்பாசிரியர் முதல் எல்லாப் பதிப்பாசிரியரும் இணைத்துக் கொண்டுள்ளனர்.

## புதிய பதிப்பின் அமைப்பு முறை

முதற்பத்துத் தொகுதிகளுக்கு மட்டும் முதற்பதிப்பாசிரியர் நூற்பாவும் அதில் அடங்கிய பெயர்ப்பிரிவுமாக இரண்டு பத்தியாக அமைத்திருந்தனர். பின்வந்த பதிப்பாசிரியர் பெயர்ப்பிரிவுகளைத் தனிப்படக் காட்டவில்லை. நூற்பாக்களை மட்டுமே பதிப்பித்தனர்.

இப்பொழுது மேலே சுட்டிய இரண்டு கூறுகளும் தெளிவாய் விளங்கும் வகையில் நூல் முழுமைக்கும் அந்தந்த நூற்பாக்களை அடுத்து பொருள் தலைப்புடன் உரிய பெயர்களின் எண்தொகையும் இணைத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்வின் பயனாக அமைக்கப்படவிருக்கும் புதிய ஆய்வுப் பதிப்பில் பின்வரும் முறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. தொடர் எண் தந்து பொருள் தலைப்பு அமைத்தல், அதற்குரிய பெயர் எண் தொகை பகர அமைப்பில் கொடுத்தல் தலைப்பின் கீழ் நூற்பாவைச் சந்தி பிரித்துத் தந்து உரிய நிறுத்தற் குறியீடுகளையும் அமைத்தல், நூற்பாவில் விளக்கப்படும் பொருளைத் தடித்த அச்சில் காட்டுதல், பெயர் அடையாய் வரும் பகுதிகளைப் பிறை வளைவுக்குள் தருதல், பின் பொருள் தலைப்புடன் உரிய பெயர்களையும் எண் குறிப்புடன் நூற்பாவில் காணும் அடைவில் அமைத்தல். இதன் பின் பிரதி வேறுபாடுகள் தரப்படுகின்றன. இவை பாட வேறுபாடு—விளக்கம் என்னும் தலைப்பின் கீழ்த் தரப்படுகின்றன. தலைப்புகளில் காணும்

மாறுபாடுகள் தனியாகவும் நூற்பாக்களில் காணும் வேறுபாடுகள் தனியாகவும் தரப்பட்டுள்ளன.

நூற்பாவில் காணும் வேறுபாடுகள் நூற்பாவின் அடி எண், சீர் எண் குறிப்புடன் கொடுக்கப்பட்டுள்ளன.

இறுதியாக நூற்பாத் தொடர்பாக ஏட்டுப்பிரதி, அச்சுப் பிரதிகளில் நேர்ந்துள்ள வேறுபாடுகள் பற்றியும் குறிப்புகள் கொடுக்கப் பட்டுள்ளன.

இரண்டாம் தொகுதியில் 9 முதல் 12ஆம் தொகுதி வரையும், பின்வரும் அகராதிப் பகுதிகளும் இடம்பெறுகின்றன.

1. **தலைப்புப் பெயர் அகராதி :** இவ்வகராதியில் நூல் முழுமையிலும் அமைந்த தலைப்புகள் அகராதி அடைவில் அமைக்கப்பட்டுள்ளன.

2. **சொற்பொருள் அகராதி :** இவ்வகராதியில் தனித்தனிச் சொற்களுக்கு நிகண்டு தரும் பொருள், ஒரு பொருளுக்கு, நிகண்டு தரும் பெயர்கள் (அகராதி அடைவில்) ஆகியவை தரப்படுகின்றன. இந்த அகராதியின் துணையால் திவாகரத்துள் விளக்கம் தரப்பட்டுள்ள சொற்பொருள்களை எளிதில் கண்டு கொள்ளலாம்.

இடைச் செருகல் நூற்பாக்கள், பதிப்பாசிரியரின் புது நூற்பாக்கள் ஆகியவற்றில் காணப்படும் சொற்களும் பொருள்களும் தனிப்பட அகராதியில் அமைத்துத் தரப்படுகின்றன இவற்றால் இந்நூலில் பின்னாளில் இணைந்த சொற்களும் பொருள்களும் தெளிவுபடும். இவை ஆசிரியர் வாக்கல்லவேனும் இவையெல்லாம் பிற்காலத்தில் வளர்ந்த சொற்பொருள் நிலையாகும் என்பதனைத் தெளிவுறுத்தும் பொருட்டே சேர்த்துத் தரப்படுகின்றன. ஆகவே இவற்றிற்கும் தனியகராதிகள் பின்னிணைப்பாக அமைக்கப்படுகின்றன.

இப்புதிய ஆய்வுப் பதிப்பினால் திவாகரர் ஆதியில் தந்த சொற்பொருள் எவையெவை, பின்னால் வந்தவர்களால் சேர்க்கப் பட்டவை எவைஎவை என்பனவெல்லாம் தெரிந்துகொள்ள இயலும். திவாகரர் வாக்கு இப்பதிப்பில் வரையறுக்கப்படுவதனால் இது மொழியாராய்ச்சி, பொருளாராய்ச்சி, வரலாற்று ஆராய்ச்சி முதலியவற்றிற்குப் பெரிதும் பயன்படுவதாகும்.

## ஆய்விற்குப் பயன்பட்ட ஏடுகளும், நூல்களும்

| ஏட்டுச் சுவடிகள் கிடைத்த இடங்கள் | எண்ணிக்கை |
|---|---|
| 1. கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நிலையம் | 7 |
| 2. தஞ்சாவூர் —சரசுவதி மகால் நூல் நிலையம் | 7 |
| 3. தேசிய நூலகம் கல்கத்தா | 27 |
| 4. டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம் | 1 |
| 5. மதுரைத் தமிழ்ச்சங்கம் | 3 |
| 6. அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் பிரதி | 2 |
| 7. பெரும்புலவர் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் தொகுப்பு | 1 |

**கையெழுத்துப் பிரதிகள்**

8. பேராசிரியர் மு. இராகவையங்கார் கையெழுத்துப் பிரதி (நூல் முழுமையும் பாடபேதக் குறிப்புடன் கூடியது)
9. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் - முதல் எட்டுத் தொகுதி
10. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் — பெயர்த் தொகுதி
11. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்களின் பாட பேதக் குறிப்புடன் கூடிய புத்தகம்.

**அச்சுப் பிரதிகள்**

| | |
|---|---|
| 12. தாண்டவராய முதலியார் பதிப்பு | 1839 |
| 13. பு. நயநப்ப முதலியார்—முதலிய சென்னைக் கல்விச்சங்கத்துப் புலவர்கள் பதிப்பு | 1840 |
| 14. கருணானந்த சுவாமிகள் | 1868 |
| 15. கொ. லோகநாத முதலியார் பதிப்பு | 1917 |
| 16. டி. கோபால் நாயகர் பதிப்பு | 1923 |
| 17. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பு | 1958 |

**பிற நிகண்டுகள்**

| | |
|---|---|
| 1. அகராதி நிகண்டு—மதுரைச் தமிழ்ச் சங்கம் | 1921 |
| 2. அபிதான மணிமாலை—டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம் | 1988 |

3. அரும்பொருள் விளக்க நிகண்டு, பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்பு—மதுரைத் தமிழ்ச்சங்கம் 1931

4. ஆசிரிய நிகண்டு—தஞ்சாவூர் சரசுவதி மகால் 1975

5. உரிச்சொல் நிகண்டு—சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

6. ஒரு சொற்பல் பொருள் விளக்கம் அண்ணாசாமி பிள்ளை 1950

7. கயாதரம்—பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை பதிப்பு 1939

8 சூடாமணி நிகண்டு—ஆறுமுகநாவலர் பதிப்பு 1938

9. நாமதீப நிகண்டு—பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை பதிப்பு 1930

10. பாரதிதீபம் நிகண்டு—மு. சண்முகம்பிள்ளை, சென்னைப் பல்கலைக்கழகம். 1982

11. பிங்கல நிகண்டு—சிவன்பிள்ளை பதிப்பு 1890

12. பொதிகை நிகண்டு—பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை பதிப்பு 1934

13. பொருட்டொகை நிகண்டு—மதுரைத் தமிழ்ச் சங்கம்

**ஆய்வு நூல்கள்**

1. தமிழ் இலக்கிய வரலாறு (ஒன்பதாம் நூ. முதல் பாகம்) மு. அருணாசலம், காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1975

2. நிகண்டு சொற்பொருட்கோவை மு. சண்முகம்பிள்ளை மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 1982

3. கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள் மு. சண்முகம்பிள்ளை, இ. சுந்தரமூர்த்தி சென்னைப் பல்கலைக்கழகம், 1979

## பின்னிணைப்பு : 1

### நிகண்டாசிரியர்களும் ஆக்கிய நூல்களும்

| ஆசிரியர் | நூல் |
| --- | --- |
| அண்ணாசாமிப்பிள்ளை | ஒரு சொற் பல்பொருள் விளக்கம் |
| அரசஞ் சண்முகனார் | அந்தாதித் தொடை நிகண்டு<br>நவமணிக் காரிகை நிகண்டு |
| அருணாசல நாவலர் | விரிவு நிகண்டு |
| அருமந்தைய தேசிகர் | அரும் பொருள் விளக்க நிகண்டு |
| ஆண்டிப் புலவர் | ஆசிரிய நிகண்டு |
| இரேவண சித்தர் | அகராதி நிகண்டு |
| ஈசுர பாரதியார் | பல் பொருட் சூளாமணி |
| கயாதரர் | கயாதரம் |
| காங்கேயர் | உரிச் சொல் நிகண்டு |
| கைலாசம் | கைலாச நிகண்டு சூளாமணி |
| கோபால சுவாமி நாயக்கர் | அபிதானந்தனிச் செய்யுள் நிகண்டு |
| சாமிநாத கவிராயர் | பொதிகை நிகண்டு |
| சிவசுப்பிரமணிய கவிராயர் | நாமதீப நிகண்டு |
| சுப்பிரமணிய பாரதி | பொருட்டொகை நிகண்டு |
| திருவம்பலத்தின் னமுதம்பிள்ளை | அபிதான மணிமாலை |
| திருவேங்கட பாரதி | பாரதி தீபம் |
| திவாகரர் | திவாகரம் |
| பிங்கலர் | பிங்கலம் |
| மண்டல புருடர் | சூளாமணி நிகண்டு |
| முத்துசுவாமிப் பிள்ளை | நாநாத்த தீபிகை |
| வீரமாமுனிவர் | சதுரகராதி |
| வேதகிரி முதலியார் | வேதகிரியார் சூடாமணி |
| வைத்தியலிங்கம் பிள்ளை | சிந்தாமணி நிகண்டு |

பின்னிணைப்பு 2

## நிகண்டு நூல்கள்
[அகராதி அடைவில்]

| வரிசை எண் | நூல் | ஆசிரியர் | காலம் | பாவகை |
|---|---|---|---|---|
| 1. | அகராதி நிகண்டு | சிதம்பரம் ரேவண சித்தர் | 1594 | நூற்பா |
| 2. | அகராதி மோனைக்ககராதி யெதுகை | | | நூற்பா |
| 3. | அந்தாதித் தொடை நிகண்டு | அரசஞ் சண்முகனார் | | |
| 4. | அபிதானந் தனிச் செய்யுள் நிகண்டு | கோபால சாமி நாயகர் | | |
| 5. | அபிதானமணிமாலை | திருவம்பவத்தின்னமுதம் பிள்ளை | 19 | நூற்பா |
| 6. | அரும் பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் | 1763 | ஆசிரிய விருத்தம் |
| 7. | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப் புலவர் | 17 அல்லது 18 | ஆசிரிய விருத்தம் |
| 8. | ஆசிரிய நிகண்டு | (நீர் வேலிச் சங்கரபண்டிதர் குறிப்பு) | | |
| 9. | இயக்கத் திறவுகோல் | | | |
| 10. | உசிதசூடாமணி | சிதம்பரக் கவிராயர் | 18 | விருத்தம் |
| 11. | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் | 11ம் நூற்றாண்டு | வெண்பா |
| 12. | ஏகபாத நிகண்டு | | | |
| 13. | ஒரு சொற்பல்பொருள் விளக்கம் | அண்ணாசாமிப்பிள்ள | 1850 | |
| 14. | கந்த சுவாமியம் | சுப்பிரமணிய தீட்சிதர் | 1844 | |
| 15. | கயாதரம் | கயாதரர் | 18 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி | கட்டளைக் கலித்துறை |

| | | | | |
|---|---|---|---|---|
| 16. | கைலாசநிகண்டு சூளாமணி | கைலாசம் | | நூற்பா |
| 17. | சதுரகராதி | வீரமாமுனிவர் | 1732 | உரைநடை |
| 18. | சிந்தாமணி நிகண்டு | வைத்தியலிங்கம் பிள்ளை யாழ்ப்பாணம் | 1874 | ஆசிரிய விருத்தம் |
| 19. | சூடாமணி நிகண்டு (நிகண்டு சூளாமணி) | மண்டல புருடர் | 16ஆம்நூற்றாண்டு | ஆசிரிய விருத்தம் |
| | ஒரு சொற் பல் பொருள் விளக்கம் | அண்ணாசாமிப் பிள்ளை | (1850) 19 ஆம் நூற்றண்டு | ஆசிரிய விருத்தம் உரை விளக்கம் |
| | வேதகிரியார் சூடாமணி | களத்தூர் வேதகிரி முதலியார் | 1843 யாழ்ப்பாணம் தமிழ்ச் சங்க வெளியீடு | ஆசிரியர் விருத்தம் |
| 20. | தமிழுரிச் சொற்பனுவல் | கவிராச பண்டிதர் ராமசுப்பிரமணிய நாவலர் | 20-ம் நூற்றாண்டு | நூற்பா |
| 21. | திவாகரம் | திவாகரர் | 9-ம் ,, | நூற்பா |
| 22. | தொகை அகராதி | | 19-ம் ,, | உரைநடை |
| 23. | தொகைப் பெயர் விளக்கம் | வேதகிரி முதலியார் | 1849- ,, | |
| 24. | நவமணிக் காரிகை நிகண்டு | அரசஞ் சண்முகனார் | | கட்டளைக் கலித்துறை |
| 25. | நாநார்த்த தீபிகை | முத்துசாமி பிள்ளை | 1849- ,, | ஆசிரிய விருத்தம் |
| 26. | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக் கவிராயர் | | வெண்பா |
| 27. | பல்பொருட் சூடாமணி (வடமலை நிகண்டு) | ஈசுர பாரதியார் | 1700 | நூற்பா |
| 28. | பாரதி தீபம் | திருவேங்கட பாரதி | 18-ம்நூற்றாண்டு முற்பகுதி | கட்டளைக் கலித்துறை |
| 29. | பிங்கலம் | பிங்கலம் | 10-ம் ,, | நூற்பா |
| 30. | பொதிகை நிகண்டு | சாமிநாத கவிராயர் | | எண்சீர் விருத்தம், நூற்பா |
| 31. | பொருட்டொகை நிகண்டு | சுப்பிரமணியபாரதி | | நூற்பா |
| 32. | விரிவு நிகண்டு | நா. அருணாசல நாவலர் | 19-ம் ,, | விருத்தம் |
| 33. | வேதகிரியார் சூடாமணி | களத்தூர் வேதகிரி முதலியார் | 1843 | ஆசிரிய விருத்தம் |

## பின்னிணைப்பு 3

### ஒரு பொருட் பல்பெயர் விளக்கும் நிகண்டுகள்

1. திவாகரம்
2. பிங்கலம்
3. உரிச்சொல் நிகண்டு
4. கயாதரம்
5. பாரதி தீபம்
6. சூடாமணி நிகண்டு
7. கைலாச நிகண்டு
8. ஆசிரிய நிகண்டு
9. பல் பொருட் சூடாமணி
10. பொதிகை நிகண்டு
11. நாமதீப நிகண்டு
12. சிந்தாமணி நிகண்டு
13. அபிதானந்தனிச் செய்யுள் நிகண்டு
14. விரிவு நிகண்டு
15. நவமணிக் காரிகை நிகண்டு
16. தமிழுரிச் சொற் பனுவல்
17. அபிதான மணிமாலை

### ஒரு சொல் பல்பொருள் விளக்கும் நிகண்டுகள்

1. திவாகரம்
2. பிங்கலம்
3. உரிச்சொல் நிகண்டு
4. கயாதரம்
5. பாரதி தீபம்
6. சூடாமணி நிகண்டு
7. அகராதி நிகண்டு
8. கைலாச நிகண்டு
9. பல்பொருட் சூடாமணி (வடமலை நிகண்டு)
10. அரும் பொருள் விளக்க நிகண்டு
11. பொதிகை நிகண்டு
12. நாநார்த்த தீபிகை
13. விரிவு நிகண்டு
14. தமிழுரிச் சொற்பனுவல்

### பல் பொருட் கூட்டத்து ஒரு பெயரைத் தனிப்பட விளக்கும் நிகண்டுகள்

1. திவாகரம்
2. உரிச் சொல் நிகண்டு
3. பாரதி தீபம்
4. சூடாமணி நிகண்டு
5. பல் பொருட் சூடாமணி
6. பொருட்டொகை நிகண்டு
7. உசித சூடாமணி
8. தொகை அகராதி

## முதலாவது

# தெய்வப்பெயர்த் தொகுதி

### 1. அருகன் பெயர்

அனகன், அசலன், அதிகுணன், அபயன்,
அமைவன், அறிவன், அதிசயன், அமலன்,
பூரணன், புங்கவன், (புணர்) முக் குடையோன்,
அசோகுடைச் செல்வன், அண்ணல், தத்துவன்,
ஆதியங் கடவுள், அருவாழி யந்தணன்,
அரியணைச் செல்வன், அருளாழி வேந்தன்,
பண்ணவன், பகவன், எண்குணன், மாசேனன்,
விண்ணவன், தேவன், விறலோன், விளங்கொளி,
பொன்னெயில் நாதன், பூமிசை நடந்தோன்,
முனைவன், வீரன், முதல்வன், புனிதன்,
காமற் காய்ந்தோன், கடவுள் மூர்த்தி,
சினேந்திரன், திகம்பரன், சாந்தன், புண்ணியன்,
மூர்த்தி, ஆசான், முழுதொருங்கு உணர்ந்தோன்,
வரதன், சினவரன், என்று இவை முதலாய்
அருகற்கு இன்னம் அனந்தம் பெயரே.

**அருகன் பெயர் (43)**

1. அனகன், 2. அசலன், 3. அதிகுணன், 4. அபயன், 5. அமைவன், 6. அறிவன், 7. அதிசயன், 8. அமலன். 9. பூரணன், 10. புங்கவன், 11. முக்குடையோன், 12. அசோகுடைச் செல்வன், 13. அண்ணல், 14. தத்துவன். 15, ஆதியங்கடவுள், 16. அருவாழியந்தணன், 17. அரியணைச் செல்வன், 18. அருளாழிவேந்தன், 19. பண்ணவன், 20. பகவன், 21. எண்குணன், 22. மாசேனன், 23. விண்ணவன், 24. தேவன், 25. விறலோன், 26. விளங்கொளி, 27. பொன்னெயில் நாதன், 28. பூமிசை நடந்தோன், 29. முனைவன், 30. வீரன், 31. முதல்வன், 32. புனிதன், 33. காமற் காய்ந்தோன், 34. கடவுள்மூர்த்தி, 35. சினேந்திரன், 36. திகம்பரன், 37. சாந்தன், 38, புண்ணியன், 39. மூர்த்தி, 40. ஆசான், 41. முழுதொருங்கு உணர்ந்தோன், 42. வரதன், 43. சினவரன்.

பாடவேறுபாடு—விளக்கம்

*தலைப்பு :* அருகபரமேசுவரன் பெயர்

1 : 4 அபையன், 2 : 1 அமையவன், 2 : 3 அதிசெயன், 5 ; 4 வேந்தன், 6 : 4 அந்தணன், 7 : 4 மாசேநன், மாசினன், 8-9-ஆம் அடிகள் சில ஏடுகளில் மாறிக் (9, 8) காணப் படுகின்றன. 8:4 விளங்கொளிப், 11:4 கமலமூர்த்தி, **கமலஹூர்தி.** கடவுள் நிராயுதன் 12 : 3 திரியம்பதன் 13-14ஆம் அடிகளுக்கு

இடையில், 'தீர்த்தன் திருமரு மார்பன் உரவோன்' என ஓர் அடி சில ஏடுகளில் காணப்படுகிறது. 14 : 2 சிநன்வரன், சினன்வரன்-சிநன், வரன் என இரு பெயராகச் சிலர் கொள்வர். இவற்றுள் 'சினன்' என்பதற்கு அருகன் என்று கொள்ளலா மாயினும், 'வரன்' என்பதனை அவ்வாறு கொள்வதற்கில்லை. 'சினவரன் றேவன் சிவகதி நாயகன்' எனச் சிலப்பதிகாரம் (10 : 180) அருகனைக் குறிப்பிடுகிறது. இதற்குச் 'சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்' என விளக்கம் தருகிறார் அடியார்க்கு நல்லார் 15: 4 பேரே. (1)

## 2. சிவன் பெயர்

சங்கரன், இறையோன், காம தகனன்,
கங்கா தரனே, கறைமிடற்று அண்ணல்,
கூற்றை யுதைத்தோன், குன்ற வில்லி
ஏற்று வாகனன், திரியம்பகன், சோதி,
நக்கன், சடையோன், நாரி பாகன்,
முக்கட் பகவன், பசுபதி, பரமன்,
கொன்றை சூடி, (கொலை) மழு வாளி,
ஈமத் தாடி, பிஞ்ஞகன், பித்தன்,
ஆனை யுரித்தோன், அரன், சிவன், உருத்திரன்,
கால காலன், கபால மூர்த்தி,
நீல கண்டன், நீறணி கடவுள்
அரவா பரணன், ஆரழ லாடி,
பிறை (யது) சூடி, பெருமான், உமாபதி,
அழ (லது) வேந்தி, அமலன், ஆனந்தன்,
பரசு பாணி, சுடலை யாடி.
மானிட மேந்தி, மறைமுதல், யோகி,
புலித்தோ லுடையோன், புரமூன் றெரித்தோன்,
பினாக பாணி, பேயோ டாடி,
பூத நாதன் (புணர்) கங் காளன்,
ஞான மூர்த்தி, ஈசன், அனாதி
ஐம்முகன், பகவன், ஆதி, பாண்டரங்கன்,
ஆலமர் கடவுள், அந்தி வண்ணன்,
நந்தி, நம்பன், நாதன், தற்பரன்,
கண்ணுதல், மூர்த்தி, கயிலை யாளி—என்று
எண்ணிய நாமம் இன்னமும் பலவே.

**சிவன் பெயர் (64)**

1. சங்கரன், 2. இறையோன், 3. காமதகனன், 4. கங்காதரன், 5. கறைமிடற்றண்ணல், 6. கூற்றையுதைத்தோன், 7. குன்றவில்லி, 8. ஏற்றுவாகனன், 9. திரியம்பகன், 10. சோதி, 11. நக்கன், 12. சடையோன், 13. நாரிபாகன்,

பாடவேறுபாடு—விளக்கம்

ஊழிக்கும் மாத்திரைக்கும் பெயர் என்னும் தலைப்பில்
130, 131 ஆம் நூற்பாக்களை ஒரே நூற்பாவாகக்
கொள்வர் சிலர். (131)

## 132. நிகழ்காலத்தின் பெயர்

வேலை என்பது நிகழ்காலம் ஆகும்

**நிகழ்காலத்தின் பெயர் (1)**

1. வேலை

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நிகழ்காலப் பெயர்
3-4 நிகழுங் காலம் (132)

## 133. வெப்பத்தின் பெயர்

உருப்பம், வெப்பம்

**வெப்பத்தின் பெயர் (1)**

1. உருப்பம்

பாடவேறுபாடு—விளக்கம்

உருப்பம் வெப்பம் ஆகும் என்ப. (133)

## 134. கோடையின் பெயர்

வேனில், கோடை.

**கோடையின் பெயர் (1)**

1. வேனில்

பாடவேறுபாடு—விளக்கம்

வேனில் கோடை மிசைப்பெயர் ஆகும்.
'உருப்பம் வெப்பம் வேனில் கோடை' என
ஒரே நூற்பாவாகவும் சில பிரதிகளில் காணப்படும். (134)

## 135. சிறுபொழுதின் பெயர்

ஒல்லை, சிறுவரை, சிறுபொழுது ஆகும்.

**சிறுபொழுதின் பெயர் (2)**

1. ஒல்லை, 2. சிறுவரை. (135)

## 136. அறுவகைப் பருவப் பெயர்

காரே, கூதிர், முன்பனி, பின்பனி,
(சீர்) இள வேனில், வேனில், என்றாங்கு
இருமூ வகைய பருவம் என்ப.
அவைதாம்,
ஆவணி முதலா இரண்டிரண் டாக
மேவின திங்கள் எண்ணினர் கொளவே.

**அறுவகைப் பருவப் பெயர் (6)**

1. கார், 2. கூதிர், 3. முன்பனி, 4. பின்பனி, 5. இளவேனில், 6. வேனில். இவற்றுள் ஒவ்வொரு பருவமும் ஆவணி முதலாகமுறையே இரண்டு இரண்டு மாத அளவினதாகும்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அறுவகைப் பருவத்தின் பெயர்.
2:3 முதுவேனில்
3:1-2 இரு மூன்று வகைய,
இருமூன்று வகைப் பருவமகை தாம்
5:3-4 ஓரிரண்டாக. (136)

## 137. பனியின் பெயர்

இமமும், துசினமும், மஞ்சும், நீகாரமும்,
பனியின் பெயர்எனப் பகரப் படுமே.

**பனியின் பெயர் (4)**

1. இமம், 2. துகினம், 3. மஞ்சு, 4. நீகாரம்.

பாடவேறுபாடு—விளக்கம்

2:3-4 பகர வேண்டும். (137)

## 138. சரற்காலத்தின் பெயர்

கார் எனும் காலப் பெயர் சரற்காலம்.

**சரற்காலத்தின் பெயர் (1)**

1. கார்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கார்காலத்தின் பெயர். (138)

## 139. அச்சிரநாளின் பெயர்

கூதிர்க் காலமும், (குளிர்) பனிக் காலமும்
ஆகும் என்ப அச்சிர நாளே.

**அச்சிரநாளின் பெயர் (2)**

1. கூதிர்க்காலம், 2. பனிக்காலம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கூதிர்க்காலத்துக்கும்
பனிக்காலத்துக்கும் பெயர்.

2:3-4 சிசர நாளே; முதற்பதிப்புப் பாடம் (139)

## 140. இருதுப் பருவத்தின் பெயர்

ஆனியம். இருதுப் பருவம் ஆகும்.

**இருதுப் பருவத்தின் பெயர் (1)**

1. ஆனியம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பருவத்தின் பெயர்.

1-2 ஆனியமும் இருதுவும்; முதற்பதிப்புப்பாடம் (140)

## 141. காலத்தின் பெயர்

பருவமும், யாண்டும், காலம் ஆகும்.

**காலத்தின் பெயர் (2)**

1. பருவம், 2. யாண்டு.

2-4 ஆண்டும் காலமும் ஆகும்,
யாண்டு மூழியுங் காலம். (141)

## 142. உகமுடிவின் பெயர்

ஊழியும். உறையுளும், உகம்முடிவு ஆகும்.

**உகமுடிவின் பெயர் (2)**

1. ஊழி. 2. உறையுள்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : உகத்தின் பெயர், காலத்தின் பெயர்.

3-4 உகமா கும்மே, கால மாகும். (142)

## 143. கற்பத்தின் பெயர்

நான்முகன் வாழ்நாள், கற்பம் ஆகும்.

**கற்பத்தின் பெயர் (1)**

1. நான்முகன் வாழ்நாள்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பிரமகற்பத்தின் பெயர்,
நான்முகன் வாழ்நாளின் பெயர். (143)

## 144. வாழ்நாளின் பெயர்

ஆயுள், ஆயுகம், வாழ்நாள் ஆகும்.

**வாழ்நாளின் பெயர் (2)**

1. ஆயுள். 2. ஆயுகம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வயதின் பெயர்.
இதன்பின் அச்சுப்பிரதியில் இருநூற்பாக்கள் உள.

**மேலின் பெயர்**

மேக்கு வலமீ யும்பர்மே லாகும்.

**கீழின் பெயர்**

கிழக்கு கீழே.

இவை பெரும்பான்மைப் பிரதிகளிலும் இல்லை. பேராசிரியர் மு. இராகவையங்கார் தம்முடைய பிரதியில் இவற்றைச் சேர்த்துள்ளார். எனினும், அவர், 'இச்சூத்திரங்கள் இங்கு வருதலினும் இடப்பெயர்த் தொகுதியில் இருத்தற்குரியன' என்று குறிப்புத் தந்துள்ளார். இதனுல் இவை இங்கு அமைதல் பொருந்துமாகாது என்பதுவே பேராசிரியர் கருத்தும் ஆகும்.

(144)

## 145. மழையின் பெயர்

துவலை, பெயலை, துளியே, மாரி,
உறை, பெயல், ஆலி, உதகம், சிதறி,
தூவல், சீகரம், தூறல், வருடம்.

**மழையின் பெயர் (13)**

1. துவலை, 2. பெயலை, 3. துளி, 4. மாரி, 5. உறை, 6. பெயல், 7. ஆலி, 8. உதகம், 9. சிதறி, 10. தூவல், 11. சீகரம், 12. தூறல், 13. வருடம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வருடத்தின் பெயர்
1:1-2 திவலை பெய்தல், (145)

## 146. மேகத்தின் பெயர்

மேகம், சீதம், விசும்பு, வான், விண், முகில்,
கொண்மூ, மஞ்சு, கொண்டல், மை, மழை,
எழிலி, கார், குயின், கந்தரம், விண்டு,
மங்குல், மால், செல், கனமும் வரையார்.

**மேகத்தின் பெயர் (19)**

1. சீதம், 2. விசும்பு, 3. வான், 4. விண், 5. முகில், 6. கொண்மூ, 7. மஞ்சு, 8. கொண்டல், 9. மை, 10. மழை, 11. எழிலி, 12. கார், 13. குயின், 14. கந்தரம், 15. விண்டு, 16. மங்குல், 17. மால், 18. செல், 19. கனம்.

பாடவேறுபாடு—விளக்கம்

4:4 வரையாரென்ப (146)

## 147. இடியேற்றின் பெயர்

உருமும், செல்லும், அசனியும், உருமேறும்,
இடியும், வானேறும், இடியேற்றின் பெயர்

**இடியேற்றின் பெயர் (6)**

1. உரும், 2. செல், 3. அசனி, 4. உருமேறு, 5. இடி, 6. வானேறு.

பாடவேறுபாடு—விளக்கம்

இதனைத் தொடர்ந்து ஒரு சில ஏடுகளில் நான்கு
நூற்பாக்கள் உள:
இடிவெடி ஒலியுருமும் விண்ணேறு அசனி
செல்லிடி யேறு மடங்கலு மதுவே.
இடிப்பெய ரிகுளையென் றிசைக்கவும் படுமே.
சம்பை வித்து சபலை தடித்து
சஞ்சலை துடித்தி, மின்னெனச் சாற்றுவர்.
மாரி வானம் வருடமழை யென்பு. (147)

## 148. பெருமழையின் பெயர்

ஆசாரம் என்பது பெருமழை ஆகும்.

**பெருமழையின் பெயர் (1)**

1. ஆசாரம் (148)

## 149. விடாது சொரிதலின் பெயர்

சோனையும், பனித்தலும், விடாது சொரிதல்.

**விடாது சொரிதலின் பெயர் (2)**

1. சோனை, 2. பனித்தல்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : விடாமழையின் பெயர் (149)

## 150. மழை பெய்து விடுதலின் பெயர்

தலையல் என்பது மழைபெய்து விடுதல்.

**மழைபெய்து விடுதலின் பெயர் (1)**

1. தலையல் (150)

## 151. துளியின் பெயர்

உறை, துளி ஆகும்.

**துளியின் பெயர் (1)**

1. உறை

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : உறைதுளியின் பெயர்.
துளியின் பெயர் சுட்டும் நூற்பா சில பிரதிகளில் இல்லை.
தளிபெய லாளி யுறைதுளி யாகும்—என்பது அச்சுப்பிரதி.
(151)

## 152. ஆலாங்கட்டிப் பெயர்

ஆலி, ஆலாங் கட்டி ஆகும்.

**ஆலாங்கட்டிப் பெயர் (1)**

1. ஆலி,

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஆலங்கட்டியின் பெயர்.
2-3 ஆலங்கட்டி
ஆலி சனோபலம் ஆலாங் கட்டி. (152)

## 153. துவலையின் பெயர்

சிதரம், பிசிரே, சிதர், அரி, சீகரம்,
தூவல், என்றுஇவை துவலை யாகும்.

**துவலையின் பெயர் (6)**

1. சிதரம், 2. பிசிர், 3. சிதர், 4. அரி, 5. சீகரம், 6. தூவல்.

பாடவேறுபாடு—விளக்கம்

1:1 சிகரம், சீகரம், 2. பிதிரே, 4. சிகரம்
2:1 தூறல் (153)

## 154. மின்னலின் பெயர்

தடித்தும், தடிந்தும், மின்னல் ஆகும்.

**மின்னலின் பெயர் (2)**

1. தடித்து, 2. தடிந்து.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மின்னின் பெயர்:
தடித்துத் தடிமின்—என்பது அச்சுப் பிரதி (154)

## 155. இடியின் பெயர்

இடிப் பெயர். இருளே.

**இடியின் பெயர் (1)**

1. இருள்.

பாடவேறுபாடு—விளக்கம்

இடிப்பெய ருருமு வென்னல் வேண்டும்.
154-155 ஆம் நூற்பாக்களை 'தடித்துந் தடிந்துமின் இடிப் பெய ரிருளே' என ஒன்றாகக் கொண்டு. மின்னலுக்கும் இடிக்கும் பெயர் எனவும் தலைப்பிடுவர். (155)

## 156. பரிவேடத்தின் பெயர்

ஊர்கோள், வட்டம், பரிவேடப் பெயரே.

**பரிவேடத்தின் பெயர் (2)**

1. ஊர்கோள், 2. வட்டம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பரிவேட பெயர்.
3-4 பரிவேட மென்ப. பரிதிபரி வேடம். (156)

## 157. வானவில்லின் பெயர்

வானவில், இந்திர வில்என மொழிப.

**வானவில்லின் பெயர் (1)**

1. இந்திரவில்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : இந்திரவில்லின் பெயர்.
4 வைப்பர், விசைப்பர், வறைவர். (157)

## 158. காமன் காண்டத்தின் பெயர்

காமன் காண்டம், கருப்புவில் ஆகும்.

**காமன் காண்டத்தின் பெயர் (1)**

1. கருப்புவில்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : காமன் காண்டவத்தின் பெயர்
1-2 காண்டவம், காண்டிபம்,
4 என்ப. (158)

## 159. திவாகர வரலாறு

வடநூற்கு அரசன். தென்தமிழ்க் கவிஞன்,
கவியரங்கு ஏறும் உபயகவிப் புலவன்,
செறிகுணத்து அம்பர் கிழவோன், சேந்தன்
அறிவுகரி யாகத் தெரிசொல் திவாகரத்து
முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி முற்றும்.

பாடவேறுபாடு—விளக்கம்

2:1-2 ஏற்றும், 4:1-2 அறிவுக் கறிவாகத் (159)

## இரண்டாவது

# மக்கட்பெயர்த் தொகுதி

### 160. அருந்தவர் பெயர்

துறவோர், ஐயர், மாதவர், முனிவர்,
அறவோர், நீத்தோர், அறிஞர், உயர்ந்தோர்,
தாபதர், மெய்யர், தவத்தர், தபோதனர்,
முனைவர், இலிங்கிகள், படிவர், பண்ணவர்,
யோகிகள், கடிந்தோர், பெரியோர், உறுவர், என்று
ஆகிய அந்தணர் அருந்தவர் பெயரே.

**அருந்தவர் பெயர் (21)**

1. துறவோர், 2. ஐயர், 3. மாதவர், 4. முனிவர், 5. அறவோர், 6, நீத்தோர். 7. அறிஞர், 8. உயர்ந்தோர், 9. தாபகர், 10. மெய்யர், 11, தவத்தர், 12. தபோதனர், 13. முனைவர், 14. இலிங்கிகள், 15. படிவர், 16. பண்ணவர், 17. யோகிகள், 18. கடிந்தோர், 19. பெரியோர், 20. உறுவர், 21. அந்தணர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தபோதனர் பெயர், முனிவர் பெயர்.
2:2 நீத்தார்
3:3 தபத்தர்
4:2 இருடிகள்
4ஆம் அடிக்குப்பின்,
'மிக்கோர் கோபங் காய்ந்தோர் ஞானியர்'
என்பது அதிகப்பாடம்.
5:4 உறுதவரர்
5:4 பேரே (1)

### 161. சைவதவப்பாலோர் பெயர்

மாவிர தியரும், காளா முகரும்,
பாசு பதரும், சைவதவப் பாலோர்.

**சைவதவப் பாலோர் பெயர் (3)**

நாராயணன் சமயத்தோர் பாகவதரே. (2)

## 162. நாராயணன் சமயத்தோர் பெயர்

நாராயணன் சமயத்தோர், பாகவதரே

**நாராயணன் சமயத்தோர் பெயர் (1)**

1. பாகவதர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பாகவதர் பெயர்
2 சமயத்தோர் (3)

## 163. சமணர் பெயர்

சாவகர், அருகர், சமணர் ஆகும்.
ஆசீ வகரும் அத்தவத் தோரே.

**சமணர் பெயர் (3)**

1. சாவகர், 2. அருகர், 3, ஆசீவகர்.

பாடவேறுபாடு—விளக்கம்

3-4 சமணர் அமணர் (4)

## 164. பவுத்தர் பெயர்

புத்தர், சாக்கியர், தேரரும், பவுத்தரும்,
(வைத்த) சீவகரும், அத்தவத் தோரே.

**பவுத்தர் பெயர் (4)**

1. புத்தர், 2. சாக்கியர், 3. தேரர், 4. சீவகர்,

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பௌத்தர் பெயர், புத்தர் பெயர்,
1:3.4 தேரர் பௌத்தர்
1:4 பௌத்தரும்
2:2 சீவரரும் (5)

## 165. சமண முனிவர் பெயர்

சாரணர், சமண முனிவர்

**சமண முனிவர் பெயர் (1)**

1. சாரணர்

முனிவராகும் அச்சப்பிரதி. (6)

## 166. சடைமுடியோர் பெயர்

தாபதர், சடைமுடியோர்

**சடைமுடியோர் பெயர் (1)**

1. தாபதர்

பாடவேறுபாடு—விளக்கம்

165-166ஆம் நூற்பாக்களை ஒரே நூற்பாவாகக் கொண்டு, இரு தலைப்புகளின் கீழும் அமைப்பர். (7)

## 167. பார்ப்பார் பெயர்

அய்யர், வேதியர், இருபிறப் பாளர்,
மெய்யர், மிக்கவர், மிறையோர், பூசுரர்,
அந்தணர், நூலோர், அறுதொழி லாளர்,
செந்தீ வளர்ப்போர், உயர்ந்தோர், ஆய்ந்தோர்,
ஆதி வருணர், வேத பாரகர்,
வேள்வி யாளர், விப்பிரர், தொழுகுலத்தோர்,
முப்புரி நூலோர், முனிவர், என்று இவை
தப்புஇல் பார்ப்பார் தம்பெயர் ஆகும்,

**பார்ப்பார் பெயர் (20)**

1, அய்யர், 2. வேதியர், 3, இருபிறப்பாளர், 4. மெய்யர், 5. மிக்கவர், 6. மறையோர், 7. பூசுரர், 8. அந்தணர், 9. நூலோர், 10. அறுதொழிலாளர், 11. செந்தீ வளர்ப்போர், 12. உயர்ந்தோர், 13. ஆய்ந்தோர், 14. ஆதிவருணர், 15. வேதபாரகர், 16. வேள்வியாளர், 17. விப்பிரர், 18. தொழுகுலத்தோர். 19. முப்புரிநூலோர், 20. முனிவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

**தலைப்பு :** பிராமணர் பெயர்

1:1 ஐயர்

8:3-4 அறுதொழி லாய்ந்தோர்
4:3-4 ஆய்ந்தோர் உயர்ந்தோர்
6 விப்பிரர் தொழுகுலத்தோர் வேள்வியாளர்
6:4 தொழுகுலர்
8:3-4 தம்பே ராகும். (8)

## 168. நூலுரைப்போர் பெயர்

கணக்காயர், நூலுரைப்போர்

**நூலுரைப்போர் பெயர் (1)**

1. கணக்காயர்,

பாடவேறுபாடு—விளக்கம்

1. ஓத்துரைப்போர். (9)

## 169. கலைவல்லோர் பெயர்

கவிஞர், கலைவல்லோர்

**கலைவல்லோர் பெயர் (1)**

1. கவிஞர்

பாடவேறுபாடு—விளக்கம்

168, 169ஆம் நூற்பாக்களைக் 'கலைவல்லோர் பெயர்' என்பதன்கீழ் ஒரே நூற்பாவாகக் கொள்வதும் உண்டு. (10)

## 170. அறிவுடையோர் பெயர்

சான்றோர், மிக்கோர்,, நல்லவர், மேலவர்,
ஆய்ந்தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகுஎன
வாய்ந்த ஆன்றோர் அறிவுடை யோரே

**அறிவுடையோர் பெயர் (9)**

1. சான்றோர், 2. மிக்கோர், 3. நல்லவர், 4. மேலவர், 5. ஆய்ந்தோர், 6. உயர்ந்தோர், 7. ஆரியர், 8. உலகு, 9. ஆன்றோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

1-2 பெரியோர்
168, 169, 170 மூன்றையும் ஒன்றாக அறிவுடையோர் பெயரின்கீழ் சிலர் அமைத்தனர். (11)

## 171. புலவர் பெயர்

கவிஞர், கலைஞர், கற்றவர், மேதையர்,
சவையே, சங்கம், முதுவோர், மூத்தோர்,
அவையே, அறிஞர், புதரே புலவர்.

### புலவர் பெயர் (11)

1. கவிஞர், 2. கலைஞர், 3. கற்றவர், 4. மேதையர், 5. சவை, 6. சங்கம், 7. முதுவோர், 8. மூத்தோர், 9. அவை, 10. அறிஞர், 11. புதர்.

பாடவேறுபாடு—விளக்கம்

2:3 முதுவர் (12)

## 172. மிகவல்லோர் பெயர்

விபுதர், நிபுணர், குசலர், மிகவல்லோர்

### மிகவல்லோர் பெயர் (3)

1. விபுதர், 2. நிபுணர், 3. குசலர்.

பாடவேறுபாடு—விளக்கம்

3-4 குசலமிக வல்லோரே (13)

## 173. மூத்தோன் பெயர்

அடிகள், அத்தன், அய்யன், ஆசான்,
குரவன், சாமி, கோமான், பெருமான்,
உரவோன், ஈசன், இறைவன், தலைவன்,
(விரவு) பதி, நாதன், மூத்தோன் பெயரே.

### மூத்தோன் பெயர் (14)

1. அடிகள், 2. அத்தன், 3, அய்யன், 4. ஆசான், 5. குரவன், 6. சாமி, 7. கோமான், 8. பெருமான், 9. உரவோன், 10. ஈசன், 11. இறைவன், 12. தலைவன், 13. பதி, 14. நாதன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஆசாரியன் பெயர்
3:3-4 இறைவன் தலைவனொடு, இறைவன் றன்னோடு
4:1-3 விரவுபதி னொன்று மூத்தோர் (14)

## 174. பெருமையிற் சிறந்தோன் பெயர்

அண்ணலும், குரிசிலும், ஏந்தலும், தோன்றலும்,
செம்மலும், பெருமையிற் சிறந்தோன் பெயரே.

**பெருமையிற் சிறந்தோன் பெயர் (5)**

1. அண்ணல், 2. குரிசல், 3. ஏந்தல், 4. தோன்றல், 5. செம்மல்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : சிறந்தோர் பெயர்
1:2 குருசிலும்
2:3-4 சிறந்த தொல் பெயரே, சிறந்தோர் பேரே (15)

## 175. இறைவன் பெயர்

நாதன், நாயகன், அதிபன், காந்தன்,
பதி, கோன், ஈசன், செம்மல், இறையே,
தலைவன், மன்னவன், பிரானே, கொழுநன்,
அரசன், ஆதி, எனப்பதி னைந்தும்
உரைசெய் எப் பொருட்கும் இறைவன் மேற்றே.

**இறைவன் பெயர் (15)**

1. நாதன், 2. நாயகன், 3. அதிபன், 4. காந்தன், 5. பதி, 6. கோன், 7. ஈசன், 8. செம்மல், 9. இறை, 10. தலைவன், 11. மன்னவன், 12. பிரான், 13. கொழுநன், 14. அரசன், 15. ஆதி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : எப்பொருட்குமிறைவன் பெயர்
3:2 மன்னவன் (16)

## 176. உயர்ந்தோர் பெயர்

உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே.

**உயர்ந்தோர் பெயர் (1)**

1. உலகம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : உலகமென்பதின் பெயர் (17)

## 177. திரண்டோர் பெயர்

சங்கமும், குழுவும், கூட்டமும், கணமும்,
(தங்கிய) தொகுதியும், சவையும், அவையும்,
இங்குஇவை திரண்டோர் யாவர்க்கும் உரிய.

**திரண்டோர் பெயர் (7)**

1. சங்கம், 2. குழு, 3. கூட்டம், 4. கணம், 5. தொகுதி, 6. சவை, 7. அவை.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : சவைக்குப் பெயர், சவையின் பெயர், கூட்டத்தின் பெயர்.
2:2 சமூகமும் (18)

## 178. அரசர் பெயர்

புரவலன், கொற்றவன், பெருமான், காவலன்,
அரசன், ஏந்தல், கோவே, குரிசில்,
தலைவன், மன்னவன், வேந்தன், முதல்வன்,
நிருபன், பூபாலன், நரபதி, பார்த்திபன்,
இறைவன், அண்ணல், எனப்பதி னெட்டும்
அரசர் தொல்பெயர் ஆகும் என்ப.

**அரசர் பெயர் (18)**

1. புரவலன், 2. கொற்றவன், 3. பெருமான், 4. காவலன், 5. அரசன், 6. ஏந்தல், 7. கோவே, 8. குரிசில், 9. தலைவன், 10. மன்னவன், 11. வேந்தன், 12. முதல்வன், 13. நிருபன், 14. பூபாலன், 15. நரபதி, 16. பார்த்திபன். 17. இறைவன், 18. அண்ணல்,

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அரசன் பெயர்
2:1 பொருநன், அரையன்
2:4 குருசில்
3:2 மன்னன்
6:1-2 அரசன் றொல் பெயர் (19)

## 179. குருகுலத்தரசர் பெயர்

பவுரவர், கவுரவர், குருகுலத் தரசர்

**குருகுலத்தரசர் பெயர் (2)**

1. பவுரவர், 2. கவுரவர்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

1. பரதர், பரதவர், 2. கௌரவர் (20)

## 180. சேரன் பெயர்

பூழியன், உதியன், கொங்கன், பொறையன்,
வானவன், குட்டுவன், வான வரம்பன்,
வில்லவன், குடநாடன், வஞ்சி வேந்தன்,
கொல்லிச் சிலம்பன், கோதை, கேரளன்,
போந்தின் கண்ணியன், பொருநைத் துறைவன்,
சேரலன், மலையமான், (கோச்) சேரன் பெயரே.

**சேரன் பெயர் (17)**

1. பூழியன், 2. உதியன், 3. கொங்கன், 4, பொறையன், 5. வானவன், 6, குட்டுவன், 7. வானவரம்பன், 8. வில்லவன், 9. குடநாடன், 10. வஞ்சிவேந்தன், 11. கொல்லிச் சிலம்பன், 12. கோதை, 13. கேரளன், 14, போந்தின் கண்ணியன், 15. பொருநைத்துறைவன், 16. சேரலன், 17. மலையமான்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

தலைப்பு : கோச் சேரன் பெயர்
5 போந்தின் கண்ணிக்கோ வான்பொருநைத் துறைவன்
5:2 கண்ணிக்கோன், கண்ணிக்கோமான் (21)

## 181. சோழன் பெயர்

சென்னி, வளவன், கிள்ளி, செம்பியன்,
பொன்னித் துறைவன், புலிக்கொடிப் புரவலன்,
நேரியன், ஆர்த்தார்க்கோன், நேரிறை, அபயன்,
நேரி வெற்பன், கோழி வேந்தன்,
புனனாடன், (கோச்) சோழன் பெயரே.

**சோழன் பெயர் (13)**

1. சென்னி, 2. வளவன், 3. கிள்ளி, 4. செம்பியன், 5. பொன்னித்துறைவன், 6. புலிக்கொடிப் புரவலன், 7. நேரியன், 8. ஆர்த்தார்க்கோன், 9. நேரிறை. 10. அபயன், 11. நேரிவெற்பன், 12. கோழிவேந்தன், 13. புனனாடன்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

தலைப்பு : கோச்சோழன் பெயர்
3:3-4 ஏறிறை யபையன்
5:1-2 சூரியன் புனனாடன்-அச்சுப்பிரதி (22)

## 182. பாண்டியன் பெயர்

செழியன், தமிழ்நாடன், கூடற்கோ, தென்னவன்,
வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன்,
கவுரியன், வேம்பின், கண்ணிக்கோ, கைதவன்,
பொதியப் பொருப்பன், (புனல்) வையைத் துறைவன்,
குமரிச் சேர்ப்பன் (கோப்) பாண்டியனே.

**பாண்டியன் பெயர் (14)**

1. செழியன், 2. தமிழ் நாடன், 3. கூடற்கோ, 4. தென்னவன், 5. வழுதி, 6. மீனவன், 7. பஞ்சவன், 8. மாறன், 9, கவுரியன், 10. வேம்பின்கண்ணிக்கோ, 11. கைதவன், 12. பொதியப் பொருப்பன், 13. வையைத் துறைவன், 14. குமரிச் சேர்ப்பன்,

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கோப்பாண்டியன் பெயர்
3:1 கௌரியன்
4:3 புனல்வைகைத் (23)

## 183. சளுக்கியர் வேந்தன் பெயர்

வேள்புல வரசன், சளுக்கியர் வேந்தன்

**சளுக்கியர் வேந்தன் பெயர் (1)**

1. வேள்புலவரசன்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : சளுக்குவேந்தர் பெயர்
வேள்புல வரசர் சளுக்கு வேந்தர்
3-4 சளுக்கி வேந்தர் (24)

## 184. குறுநில வேந்தர் பெயர்

வேளிரும், புரோசரும், குறுநில வேந்தர்

**குறுநில வேந்தர் பெயர் (2)**

1. வேளிர், 2. புரோசர் (25)

## 185. குறும்பர் பெயர்

அரட்டர், குறும்பர் ஆகும் என்ப.

**குறும்பர் பெயர் (1)**

1. அரட்டர்

பாடவேறுபாடு—விளக்கம்

இந்நூற்பா சில ஏடுகளில் இல்லை.
184-185ஆம் நூற்பாக்களை குறுநில வேந்தர் பெயர் என்னும் தலைப்பில் ஒன்றாக்கியும் பாடம் கொள்வர்.

(26)

## 186. மந்திரி பெயர்

முதுவர், குரவர், மூத்தோர், முன்னோர்,
உழையோர், சூழ்வோர், நூல்வல் லோரே,
அமைச்சர், தேர்ச்சித் துணைவர், என்றாங்கு
இசைத்த மந்திரிக் கிழவர்க்கு எய்தும்.

**மந்திரி பெயர் (9)**

1. முதுவர், 2. குரவர், 3. மூத்தோர், 4. முன்னோர், 5. உழையோர், 6. சூழ்வோர், 7. நூல்வல்லோர், 8. அமைச்சர், 9. தேர்ச்சித்துணைவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மந்திரிக்கிழவர் பெயர்

முதுவர் பெயர் : முதுவர் குரவர் மூத்தோர் முன்னோர்.

நூல்வல்லோர் பெயர் : உழையோர் சூழ்வோர்
நூல்வல் லோரே.

மந்திரி பெயர் : அமைச்சர் தேர்ச்சித் துணைவர் என்றாங்கு
இசைத்த மந்திரிக் கிழவர்க்கு எய்தும்
என மூன்று தலைப்பில் மூன்று நூற்பாக்களாகக்
கொள்கிறது ஒரு பிரதி. (27)

## 187. மந்திரி நட்பாளர் பெயர்

இனப்பெயர் தன்நட் பாளர்க்கு எய்தும்.

**மந்திரி நட்பாளர் பெயர் (1)**

1. இனம்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தன்னட்பாளர் பெயர், நட்பாளர் பெயர்
3-4 பாளர்க்கு மெய்தும். (28)

## 188. மந்திரித்தந்திரி பெயர்

ஏனாதியர், காவிதியர், அமாத்தியர். எனும் பெயர்
ஆனா மந்திரித் தந்திரிக்கு ஆகும்.

**மந்திரித்தந்திரி பெயர் (3)**

1. ஏனாதியர், 2. காவிதியர். 3. அமாத்தியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மந்திரித் தந்திரி பேர், மந்திரிகள் தந்திரிகள் பெயர், தந்திரிகள் பெயர்.
1:1-4 ஏனாதிகர் காவிதிக ராமாத்திய ரெனப்பெயர்
2:2-4 மந்திரி தந்திரிக் கெய்தும் (29)

## 189. கருமத்தலைவர் பெயர்

வள்ளுவன், சாக்கை, எனும்பெயர் மன்னர்க்கு
உள்படு கருமத் தலைவர்க்கு ஒன்றும்.

**கருமத் தலைவர் பெயர் (2)**

1. வள்ளுவன், 2. சாக்கை.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மன்னர்க்குள்படு கருமத் தலைவர் பெயர்
2:3-4 தலைவர்க் கெய்தும். (30)

## 190. பெரும்போர்த் தலைவர் பெயர்

பெரும்போர்த் தலைவர், பொருநர் எனப்படுவர்

**பெரும்போர்த் தலைவர் பெயர் (1)**

1. பொருநர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : போர்த்தலைவர் பெயர், பொருநர் பெயர்.
1. பொரும்போர்த் (31)

## 191. பரிவாரத்தின் பெயர்

பரியாளம் என்பது பரிவாரம் ஆகும்,

**பரிவாரத்தின் பெயர் (1)**

1. பரியாளம் (32)

## 192. செட்டிகள் பெயர்

இப்பர், பரதவர், வயிச்சியர், கவிப்பர்,
எட்டியர், இளங் கோக்கள், ஏர்த்தொழிலர், பசுக்காவலர்,
(ஒப்புஇல்) நாய்கர், விணைஞர், வணிகர் என்று
(அத்தகு) சிலேட்டர், செட்டிகள் பெயரே.

**செட்டிகள் பெயர் (12)**

1. இப்பர், 2. பரதவர், 3. வயிச்சியர், 4. கவிப்பர், 5. எட்டியர், 6. இளங்கோக்கள், 7. ஏர்த்தொழிலர், 8. பசுக்காவலர், 9. நாய்கர், 10. விணைஞர், 11. வணிகர், 12. சிலேட்டர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வைசியர் பெயர்
1:2 பரதர்
1:3 வைச்சியர், வைசியர், வசியர்.
3:3-4 வணிகர் விணைஞரென்
4:2 சிலேட்டியர், சிரேட்டிகள்
4:2-4 சிலேட்டியர் செட்டிகள் வணிகர் (33)

## 193 வேளாளர் பெயர்

விணைஞர், சூத்திரர், பின்னவர், சதுர்த்தர்,
வளமையர், வேளாளர், மண்மகள், புதல்வர்,
வார்த்தைத் தொழிலோர், (வண்)களமர், உழவர்,
(சீர்த்த) ஏரின் வாழ்நர், காராளர்.

**வேளாளர் பெயர் (11)**

1. விணைஞர், 2. சூத்திரர், 3. பின்னவர், 4. சதுர்த்தர், 5. வளமையர், 6. மண்மகள் புதல்வர், 7. வார்த்தைத் தொழிலோர், 8. களமர், 9. உழவர், 10. ஏரின் வாழ்நர், 11. காராளர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : சூத்திரர் பெயர், காராளர் பெயர்.
1:4 சதுத்தர்,
2:1-2 வளமை வேளாளர்,
3:1-2 வாத்தியத் தொழிலோர், 3. வன்களமர், வெண்களமர்.
4:2-3 ஏரின் வாணர் (34)

## 194. அநாரியர் பெயர்

மிலேச்சர், அநாரியர்,

**அநாரியர் பெயர் (1)**

1. மிலேச்சர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மிலேச்சர் பெயர், ஆரியர் பெயர்,
மிலேச்ச ராரியர்,
மிலைச்ச ராதியர். (35)

## 195. சோனகர் பெயர்

யவனர், சோனகர்.

**சோனகர் பெயர் (1)**

1. யவனர்.

பாடவேறுபாடு—விளக்கம்

194-195ஆம் நூற்பாக்களை 'மிலேச்சர் பெயர் சோனகர் பெயர்' என்னும் தலைப்பில் ஒரே நூற்பாகவும் சில பிரதிகள் கொண்டுள்ளன. (36)

## 196. மருத்துவர் பெயர்

ஆயுள் வேதியர், (மா) மருத்து நூ லோர்,
மாமாமாத் திரரே. பிடகர், மருந்துவர்.

**மருத்துவர் பெயர் (4)**

1. ஆயுள் வேதியர், 2. மருத்துநூலோர், 3. மாமாத்திரர், 4. பிடகர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வயித்தியர் பெயர்
2:1-2 மாமாத் தியரே (37)
இதன் பின்னர், 'கைக்கோளர் பெயர்' என்னும் தலைப்பில் 'தந்து வாய ரத்தகோளர் கைக்கோளர்' என்று ஒரு நூற்பா சில பிரதிகளில் காணப்படுகிறது. 'அத்தகோளர்' என்பதற்குக் 'காருகர்' என்னும் பாடமும் உண்டு.

'செங்குந்தப் படையர் சேனைத் தலைவர்
தந்து வாயர் காருகர் கைக்கோளர்'
என்பது கழகப் பதிப்பு.*

---

* கழகப் பதிப்பு—திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வெளியீட்டைக் குறிக்கும் — 1958.

## 197. குயவர் பெயர்

கும்ப காரர், குலாலர்வேட் கோவர், என்று
இங்குஇவை குயவர், மட்பகைஞர் என்ப.

**குயவர் பெயர் (4)**

1. கும்பகாரர், 2. குலாலர், 3. வேட்கோவர்,
4. மட்பகைஞர். (௩8)

## 198. உப்பமைப்போர் பெயர்

உமணர், அளவர், உப்பமைப் போரே.

**உப்பமைப்போர் பெயர் (2)**

1. உமணர், 2. அளவர்,

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : உப்பாளர் பெயர், அளவர் பெயர். உப்பு
வாணிகர் பெயர்.
3-4 உப்பருப் பமைப்போர் (39)

## 199. சித்திரகாரர் பெயர்

ஓவியர், சித்திர காரர் ஆகும்.

**சித்திரகாரர் பெயர் (1)**

1. ஓவியர். (40)

## 200. கண்ணாளர் பெயர்

கம்மியர், யவனர், கொல்லர், தபதியர்,
அக்க சாலையர், சிப்பியர், அதனொடு
வித்தகர், வித்தியர், புனைவர், அறிவர் என்று
அத்தகு கண்ணாளர் பெயர்என அறைவர்.

**கண்ணாளர் பெயர் (10)**

1. கம்மியர். 2. யவனர், 3. கொல்லர், 4. தபதியர்,
5. அக்கசாலையர், 6. சிப்பியர், 7. வித்தகர், 8. வித்தியர்,
9. புனைவர், 10. அறிவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கம்மாளர் பெயர் 1:3 கருமர் 2:3 சிற்பியர்
3:3 முனைவர் 4:2 கணவாளர், கம்மாளர். (41)

## 201. தச்சர் பெயர்

தபதியர், மரவினையர், தச்சர் ஆகும்.

**தச்சர் பெயர் (2)**

1. தபதியர், 2. மரவினையர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மரவினைத் தச்சர் பெயர்
2: மரவினையர், மயன்வினைத்
தபதியர், மரத்தச்சர் பெயர் (42)

## 202. கன்னார் பெயர்

கன்னுவர் கஞ்ச காரர் கன்னார்

**கன்னார் பெயர் (2)**

1. கன்னுவர், 2. கஞ்சகாரர். (43)

## 203. தட்டார் பெயர்

செங்கொல்லர், தட்டார், பொன்வினை செய்வோர்.

**தட்டார் பெயர் (2)**

1. செங்கொல்லர், 2. பொன்வினை செய்வோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

2ஆம் அடியாக 'அக்க சாலைய ராகவும் விளம்புவர்' என்றும் சில ஏடுகள், தச்சர், தட்டார், கன்னார் என்னும் வரிசை முறையும் சில ஏடுகளில் காணப்படுகிறது. (44)

## 204. வண்ணார் பெயர்

காழியர், வண்ணார்.

**வண்ணார் பெயர் (1)**

1. காழியர் (45)

## 205. உறைகாரர் பெயர்

காரோடர், உறைகாரர்.

**உறைகாரர் பெயர் (1)**

1. காரோடர்

பாடவேறுபாடு—விளக்கம்

204-205ஆம் நூற்பாக்களை 'வண்ணார் பெயர் உறை காரர் பெயர்' என்னும் தலைப்பில் ஒரே நூற்பாவாகவும் சில பிரதிகள் கொண்டுள்ளன. (46)

## 206. ஈரங்கோலியர் பெயர்

ஏகாலியர், தூசர், ஈரங் கோலியர்

**ஈரங்கோலியர் பெயர் (2)**

1. ஏகாலியர், 2. தூசர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஈரங்கொல்லியர் பெயர்

3:4 ஈரங் கொல்லியர்

இந்நூற்பா வண்ணார் பெயருக்கு முன்னாகவும் சில பிரதிகளில் காணப்படும்.

வண்ணார் பெயர் என்னும் தலைப்பில்,
'காழிய ரீரங் கொல்லியர் வண்ணார்
'ஏகாலியர் தூச ரென்னவு மாகும்' என்றும்,
ஏகாலியர் தூச ரீரங் கோலியர்
காழியர் வண்ணா ராகக் கருதுவர்' என்றும்
சில பிரதிகள். (47)

## 207. ஊன்வினைஞர் பெயர்

சூனர், ஊன் வினைஞர்

**ஊன்வினைஞர் பெயர் (1)**

1. சூனர்,

பாடவேறுபாடு—விளக்கம்

1. ஊன் வினைஞர் (48)

## 208. தோல் வினைஞர் பெயர்

பறம்பர் தோல் வினைஞர்

**தோல்வினைஞர் பெயர் (1)**

1. பறம்பர்.

தோல் வினைஞர்

பாடவேறுபாடு—விளக்கம்

207-208ஆம் நூற்பாக்களை 'ஊன் வினைஞர் தோல் வினைஞர்' என்னும் தலைப்பில் ஒரே நூற்பாவாகவும் கொள்வர் சிலர். (49)

## 209. நாவிதர் பெயர்

பெருமஞ் சிகரே, மயிர் வினைஞர், நாவிதர்

**நாவிதர் பெயர் (2)**

1. பெருமஞ்சிகர், 2. மயிர் வினைஞர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நாவிதன் பெயர்
3-4 மயிர்வினை நாவிதர். (50)

## 210. செக்கார் பெயர்

சக்கிரர், நந்திகள், செக்கார் ஆகும்.

**செக்கார் பெயர் (2)**

1. சக்கிரர், 2. நந்திகள்.

பாடவேறுபாடு—விளக்கம்

1. சக்கிரி, சக்கரர். (51)

## 211. கள்வினைஞர் பெயர்

பழையர், துவசர், படுவர், கள் வினைஞர்

**கள்வினைஞர் பெயர் (3)**

1. பழையர், 2. துவசர், 3, படுவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கள் விலைஞர் பெயர்
4 விலைஞர் (52)

## 212. சண்டாளர் பெயர்

குணுங்கர், வங்கர், கவுண்டர், கனகதர்,
இழிஞர், கொலைஞர், புலைஞர் என்றாங்கு
இசையும் பெயர் சண்டாளர்க்கு எய்தும்.

**சண்டாளர் பெயர் (7)**

1. குணுங்கர், 2. வங்கர், 3. கவுண்டர், 4. கனகதர், 5. இழிஞர், 6. கொலைஞர், 7. புலைஞர்.

பாடவேறுபாடு—விளக்கம்

1:3-4 கவுண்டர் கனகர்
'குணுங்கர் புலைஞர் கீழோ ரிழிஞர்
அணங்கு ரம் புலைய ரபிதான மாகும்'
என்று ஒரு பிரதி. (53)

## 213. பாணர் பெயர்

சென்னியர், வயிரியர், சூதர், மாகதர்,
இன்னிசை காரர், மதங்கர், பாணர்

**பாணர் பெயர் (6)**

1. சென்னியர், 2. வயிரியர், 3 சூதர், 4. மாகதர்,
5. இன்னிசைகாரர், 6. மதங்கர். (54)

## 214. பாடற்கீழ் மக்கள் பெயர்

பண்டரும், ஓவரும், பாடற்கீழ் மக்கள்

**பாடற்கீழ் மக்கள் பெயர் (2)**

1. பண்டர், 2. ஓவர். (55)

## 215. தமிழ்க்கூத்தர் பெயர்

வாயிலோர், தமிழ்க் கூத்தர்

**தமிழ்க் கூத்தர் பெயர் (1)**

1. வாயிலோர் (56)

## 216. கழைக்கூத்தர் பெயர்

வேழம்பர், கழைக்கூத்தர்

**கழைக்கூத்தர் பெயர் (1)**

1. வேழம்பர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கழாய்க் கூத்தர் பெயர்
2. கழாய்க் கூத்தர், கழாயர்.
215-216 ஆம் நூற்பாக்களை, ‘தமிழ்க் கூத்தர் பெயர் கழைக் கூத்தர் பெயர்’ என ஒரே நூற்பாகவும் சில கொள்வர். (57)

## 217. தோற்கருவியிசைப்போர் பெயர்

இயவர், தோற்கருவி இசைக்கும் மாக்கள்

**தோற்கருவியிசைப் போர் பெயர் (1)**

1. இயவர்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தோற்கருவியர் பெயர், இயவர் பெயர் (58)

## 218. நரப்புக்கருவிகொளற்குரியோர் பெயர்

குயிலுவர், நரப்புக் கருவிகொளற் குரியோர்

**நரப்புக்கருவி கொளற்குரியோர் பெயர் (1)**

1. குயிலுவர்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நரப்புக்கருவியர் பெயர், குயிலுவர் பெயர் (59)

## 219. தொழில் செய்வோர் பெயர்

தொழுவர், கம்மியர், தொழில்செய் வோரே.

**தொழில் செய்வோர் பெயர் (2)**

1. தொழுவர், 2. கம்மியர். (60)

## 220 புதியோர் பெயர்

அதிதியர், வம்பலர், புதியோர் ஆகும்.

**புதியோர் பெயர் (2)**

1. அதிதியர், 2. வம்பலர். (61)

## 221. மீகாமன் பெயர்

நீகான் மரக்கல மீகாமன் ஆகும்.

**மீகாமன் பெயர் (1)**

1. நீகான்.

பாடவேறுபாடு—விளக்கம்

2. மரக்கலன்- அச்சுப்பிரதி.
'மீகாமன் மரக்கலன் மாலுமி மீகான்' என்றும்,
'நீயான் மீயான் மரக்கலன் மீகாமன்' என்றும்
சில பிரதிகள்.

நீயானன் பெயர்: 'நியவ னீயான னெனநிகழ்த் தினரே' என்று பீகாமன் பெயர்க்குமுன் ஒரு சூத்திரம் சில பிரதிகளில் காணப்படுகின்றது. (62)

## 222. அயலோர் பெயர்

நொதுமலர், வம்பலர் அயலோர் ஆகும்.

**அயலோர் பெயர் (2)**

1. நொதுமலர், 2. வம்பலர். (63)

## 223. வழிச்செல்வோர் பெயர்

பதிகர் என்பவர் வழிச்செல் வோரே.

**வழிச்செல்வோர் பெயர் (1)**

1. பதிகர்.

பாடவேறுபாடு—விளக்கம்

2 என்ப, என்பது. (64)

## 224. அடிமையின் பெயர்

ஆளும் தொழும்பும், அடிமை ஆகும்.

**அடிமையின் பெயர் (2)**

1. ஆள், 2, தொழும்பு. (65)

## 225. மடையர் பெயர்

வாலுவர், கூவியர், மடையர் ஆகும்.

**மடையர் பெயர் (2)**

1. வாலுவர், 2. கூவியர். (66)

## 226. ஏவல் செயற்பாலோர் பெயர்

சிலதர், சிலதியர், சேடர், சேடியர்
பரிசனம், உழையோர், ஏவல்செயற் பாலோர்,

**ஏவல் செயற்பாலோர் பெயர் (6)**

1. சிலதர், 2. சிலதியர், 3. சேடர், 4. சேடியர், 5. பரிசனம், 6. உழையோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

சேடர் பெயர் : சேடர் சேடியர்
சிலதர் பெயர் : சிலதர் சிலதியர்—என்றும்,
சேடர் சேடியர் பெயர் : சிலதர் சிலதியர் சேடர் சேடியர் என்றும்,
ஏவற் செயற்பாலோர் : பரிசன முழையோர் ஏவல் செயற்பாலோர் என்றும் சில பிரதிகள். (67)

## 227. தூதர் பெயர்

வினையுரைப் பாரும், வழியுரைப் பாரும்,
(அனைய) பண்புரைப் பாரும் தூதர்.

**தூதர் பெயர் (3)**

1. வினையுரைப்பார், 2. வழியுரைப்பார், 3. பண்புரைப்பார். (68)

## 228. ஒற்றர் பெயர்

சாரணர், உசாவே, ஒற்று எனச் சாற்றுவர்.

**ஒற்றர் பெயர் (2)**

1. சாரணர், 2. உசா.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஒற்றாளர் பெயர்
3. யொற்றரெனச் (69)

## 229. வெறியாட்டாளன் பெயர்

வேலன், முருகன், வெறியாட் டாளன்

**வெறியாட்டாளன் பெயர் (2)**

1. வேலன், 2. முருகன், (70)

## 230. தேவராளன் பெயர்

தேவ ராளன் படிமத் தோனே.

**தேவராளன் பெயர் (1)**

1. படிமத்தோன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : படிமத்தோன் பெயர்,
படிமத்தோன் பெயர்
'வேலன் முருகன் வெறியாட் டாளன்
தேவராளன் படிமத் தோனே'
என்று ஒரு நூற்பாவாகச் சிலபிரதிகள். (71)

## 231. செவிடர் பெயர்

செவிடர், வெதிரர்.

**செவிடர் பெயர் (1)**

1. வெதிரர். (72)

பாடவேறுபாடு—விளக்கம்

2. வதிரர்.

## 232. முடவன் பெயர்

முடவன், பங்கு.

**முடவன் பெயர் (1)**

1. பங்கு.

பாடவேறுபாடு—விளக்கம்

231-232 ஆம் நூற்பாக்களைச் 'செவிடர் பெயர், முடவன் பெயர்' என்னும் தலைப்பின்கீழ் ஒரு நூற்பாவாகக் கொள்வர் சிலர். (73)

## 233. அலியின் பெயர்

பேடர், பேடியர், பெண்டகர், பெண்டர் என்று
ஆகிய நான்கும் அலியின் பெயரே.

**அலியின் பெயர் (4)**

1. பேடர், 2. பேடியர், 3. பெண்டகர், 4. பெண்டர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அலியர் பெயர், அலிப்பெயர்.
1:4 பெண்டிரென்
2:3-4 அலிப்பெய ராகும். (74)

## 234. ஊமையின் பெயர்

மூகையும், மூங்கையும், ஊமை ஆகும்.

**ஊமையின் பெயர் (2)**

1. மூகை, 2. மூங்கை

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஊமை பெயர். (75)

## 235. குருடர் பெயர்

ஆதர், அந்தர், அந்தகர், குருடர்

**குருடர் பெயர் (3)**

1. ஆதர், 2. அந்தர், 3. அந்தகர்.
அந்தகரந்தர், குருடராகும். (76)

## 236. கோணர் பெயர்

கூனர், கோணர் ஆம்எனக் கூறுவர்.

**கோணர் பெயர் (1)**

1. கூனர்.

பாடவேறுபாடு—விளக்கம்

கூனல் சிந்து கோணலாமெனக் கூறுவர்
கூனல் கோணல் ஆகுமென்ப.
கூனே கோணலாமெனக் கூறுவர்—அச்சுப்பிரதி. (77)

## 237. குறளர் பெயர்

குஞ்சம், சிந்தே, குறளே வாமனம்.

**குறளர் பெயர் (3)**

1. குஞ்சம். 2. சிந்து, 3. வாமனம்.

பாடவேறுபாடு—விளக்கம்

1-2 சிந்தே குஞ்சம்
'கோணல் சிந்தே குஞ்சங் குறளே' என்றும்,
'குஞ்சம் குறளே குள்ளர்பெயராகும்' என்றும்,
'சிந்தே குஞ்சம் வாமனங் குறளே' என்றும்
சில பிரதிகள். (78)

## 238. கீழ்மக்கள் பெயர்

கயவர், கனிட்டர், பூரியர், நீசர்,
சுமடர், பேதையர், தீயோர், மூடர்,
சீத்தையர், சிறுமையர், கையர், கண்டகர்.
புல்லார், தேரார், கலர், பொறி யற்றார்,
மூர்க்கர், தீம்பர், மூகர், முசுண்டர் என்று
ஆக்கிய பெயர்கீழ் மக்கட்கு ஆகும்.

**கீழ்மக்கள் பெயர் (20)**

1. கயவர், 2. கனிட்டர், 3. பூரியர், 4. நீசர், 5. சுமடர், 6. பேதையர், 7. தீயோர், 8. மூடர், 9. சீத்தையர், 10. சிறுமையர், 11. கையர், 12. கண்டகர், 13. புல்லார், 14. தேரார், 15. கலர், 16. பொறியற்றோர், 17. மூர்க்கர், 18. தீம்பர், 19. மூகர், 20. முசுண்டர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கயவர் பெயர்
2:1 குமடர் 4. தீக்குணர்
3:1-3 முசுண்டர் சீத்தை சிறுமைகையர்
3, 4ஆம் அடிகள் தம்முள் மாறியும் உள்ளன.
4:1 புல்லர்
5:1 மூக்கர், 4. முசுடர். (79)

## 239. அறிவிலோன் பெயர்

முழுமகன், சிதடன், இழுதை, மூடன்,
அண்ணை, மடம், பேதை, குதலை, அஞ்ஞை,
அஞரே. ஆதர், அறிவிலோன் பெயரே.

**அறிவிலோன் பெயர் (11)**

1. முழுமகன், 2. சிதடன், 3. இழுதை, 4. மூடன், 5. அண்ணை, 6. மடம், 7. பேதை, 8. குதலை, 9. அஞ்ஞை, 10. அஞர், 11. ஆதர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அறிவில்லோர் பெயர்
2:1-2 மண்ணை மடன், 4. ஐஞ்ஞை
3:3 அறிவில்லோர், அறிவிலோர்
3 யஞரே யாத னேழை யறிவிலான்-அச்சுப்பிரதி. (80)

## 240. வறியோர் பெயர்

ஆதுலர், வறியோர்.

**வறியோர் பெயர் (1)**

1. ஆதுலர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வறிஞர் பெயர்
2. வறிஞர்
ஆதுலர் வறியோ ரில்லோ ரெளிய
குறுகணாளர் நல்கூர்ந்தோர் தரித்திரர்-அச்சுப்பிரதி. (81)

## 241. துயருறுவோர் பெயர்

ஆர்த்தர், துயருறுவோர்

**துயருறுவோர் பெயர் (1)**

1. ஆர்த்தர்.

பாடவேறுபாடு—விளக்கம்

ஆதுலர் வறியோர் ஆர்த்தர் துயருறுவோர் என்று
சில பிரதிகள்.
துயருவோர் பெயர்:
'ஆர்த்தர் மிடியர் துயருறு வோரே' என்றும்,
தரித்திரர் பெயர்:
'ஆதுலர் வறியோர் நல்கூர்ந்தோர் தரித்திரர்' என்றும்,
'ஏழைய ராதுல ரில்லோர் தரித்திரர்' என்றும்
சில பிரதிகள். (82)

## 242, கள்வர் பெயர்

கரவடர், சோரர், கள்வர் ஆகும்.

**கள்வர் பெயர் (2)**

1. கரவடர், 2. சோரர்.

பாடவேறுபாடு—விளக்கம்

கரவடர் சோரர் கள்வர் பட்டிகள்
தேனர் புரையோர் திருட ராகும்-அச்சுப்பிரதி,
இந் நூற்பாவின் பின்,
'விழைவு வேண்டல் ஆர்வம் வேட்பு
நயத்தல் ஆதரித்தல் காத்தல் விருப்பாம்'
என ஒரு நூற்பா சில பிரதிகளில் காணப்படுவது
பொருத்தமில்லை. (83)

## 243. உரியோர் பெயர்

கிழவர், உரியோர்.

**உரியோர் பெயர் (2)**

1. கிழவர், (84)

பாடவேறுபாடு—விளக்கம்

2. உறுவோர்.

## 244. முதறிந்தோர் பெயர்

முதுவர், முதறிந்தோர்.

**முதறிந்தோர் பெயர் (1)**

1. முதுவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : முதறிவோர் பெயர், முதறிவுடையோர் பெயர், முதுணர்ந்தோர் பெயர். 1. மூதுவர்.
243-244ஆம் நூற்பாக்களை 'உரியோர் பெயர் முதறிந்தோர் பெயர்' என்னும் தலைப்பில் ஒரே நூற்பாவாகக் கொள்வர் சிலர். (85)

## 245. வல்லாளன் பெயர்

வயவன், மீளி, வல்லா ளன்றே,

**வல்லாளன் பெயர் (2)**

1. வயவன், 2. மீளி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வல்லவன் பெயர். (86)

## 246. திறலோன் பெயர்

விறலோன், விடலை, திறலோன் பெயரே.

**திறலோன் பெயர் (2)**

1. விறலோன், 2. விடலை. (87)

## 247. நாகரிகர் பெயர்

நகரப் பதிவாழ்நர், சதுரர், நாகரிகர்.

**நாகரிகர் பெயர் (2)**

1. நகரப்பதிவாழ்நர், 2. சதுரர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நகரப்பதிவாழ்நர் பெயர்
2. பதிவாழ், பதியோர் (88)

## 248 மிகுபோகம் விழையுநர் பெயர்

விடரே, காமத்து மிகுபோகம் விழையுநர்.

**மிகுபோகம் விழையுநர் பெயர் (1)**

1. விடர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : விடர்பெயர், காமுகர் பெயர் (89)

## 249. தூர்த்தர் பெயர்

படிற்றொழுக்கர், காமத்துப் பாலோர், தூர்த்தர்.

**தூர்த்தர் பெயர் (2)**

1. படிற்றொழுக்கர், 2. காமத்துப் பாலோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

248-249ஆம் நூற்பாக்களை ஒன்றாகக் கொள்வர் சிலர்.
விடரே காமுகர் மிகுபோகம் விழையுநர்
படிற்றொழுக்கர் காமத்துப் பாலோர் தூர்த்தர்
—அச்சுப்பிரதி. (90)

## 250, இளமையோன் பெயர்

குமரன், காளை, மழவன், சேடன்,
முருகன், (கட்டு) இளமை யோன் என மொழிப.

**இளமையோன் பெயர் (5)**

1. குமரன், 2. காளை, 3. மழவன், 4. சேடன், 5. முருகன். (91)

## 251. ஏவுவான் பெயர்

வியவன், ஏவுவான்.

**ஏவுவான் பெயர் (1)**

1. வியவன். (92)

## 252. புகழாளன் பெயர்

இயவுள், புகழாளன்.

**புகழாளன் பெயர் (1)**

1. இயவுள்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

251-252 ஆம் நூற்பாக்களை, 'ஏவுவானுக்கும் புகழாளனுக்கும் பெயர்' என ஒரே நூற்பாவாகவும் கொள்வர் சிலர். (93)

## 253. கரியவன் பெயர்

களவன் என் கிளவி கரியன் என்று ஆகும்.

**கரியவன் பெயர் (1)**

1. களவன்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

தலைப்பு : சாட்சியாளன் பெயர்
கள்வனென் கிளவி கரியோ னென்ப-அச்சுப்பிரதி (94)

## 254. குண்டகன் பெயர்

கொண்டோற் பிழைத்துப் பெறும்புதல்வன், குண்டகன்.

**குண்டகன் பெயர் (1)**

1. கொண்டோற் பிழைத்துப் பெறும் புதல்வன்.

**பாடவேறுபாடு—விளக்கம்**

தலைப்பு : கொண்டோற் பிழைத்துப் பெறும்புதல்வன் பெயர்; 3. பெறுமகன். (95)

## 255. கோளகன் பெயர்

(கோள் இல்) கைம்மையில் பெறும் புதல்வன், கோளகன்

**ஜோனகன் பெயர் (1)**

1. கைம்மையில் பெறும் புதல்வன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கைம்மையிற் பெறும் புதல்வன் பெயர்
3. பெறுமகன் (96)

## 256. கானீனன் பெயர்

கன்னியில் பெறும் புதல்வன். கானீனன் ஆகும்.

**கானீனன் பெயர் (1)**

1. கன்னியில் பெறும் புதல்வன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : கன்னியில் பெறும் புதல்வன் பெயர்
3. பெறுமகன் (97)

## 257. குலமுள்ளோர் பெயர்

குலீனர் என்ப, குலமுள் ளோரே

**குலமுள்ளோர் பெயர் (1)**

1. குலீனர்.

பாடவேறுபாடு—விளக்கம்

இதற்குக் குலமில்லோர் பெயர் என்று தலைப்பிட்டு,
'குலீனர் என்ப குலமில் லோரே'
என்றும் பாடம் கொள்வர். (98)

## 258. வல்லோன் பெயர்

வலவை, வல்லவன், வல்லோன் பெயரே

**வல்லோன் பெயர் (2)**

1. வலவை, 2. வல்லவன்.

பாடவேறுபாடு—விளக்கம்

2. வல்லுநன்-அச்சுப்பிரதி. (99)

## 259. மாட்டாதார் பெயர்

வல்லாதார், மாட்டாதார்

**மாட்டாதார் பெயர் (1)**

1. வல்லாதார். (100)

## 260. வல்லோர் பெயர்

வல்லுநர், வல்லோர்.

**வல்லோர் பெயர் (1)**

1. வல்லுநர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வல்லவர் பெயர்
259-260ஆம் நூற்பாக்களை ஒரே நூற்பாவாகவும் கொண்டு மாட்டாதார் பெயர், வல்லவன் பெயர் என்றும் தலைப்பிடுவர்.
வல்லுநரல்லோர் பெயர்;
வல்லார் மாட்டாதார் வல்லுந ரல்லோர்-அச்சுப்பிரதி.

(101)

## 261. கூவனூலோர் பெயர்

உல்லியர், கூவல் நூலுரை யுணர்வோர்

**கூவனூலோர் பெயர் (1)**

1. உல்லியர்.
தலைப்பு : கூவநூ லுரையுணர்வோர்
1 ஒல்லியர்.
2-3 கூவலர் நூலுரை
குல்லியர் கூவல் நூலுணர் வோரே-என்றும்
ஒரு பாடம். (102)

## 262. கற்றோர் பெயர்

நாவலர், கற்றோர்.

**கற்றோர் பெயர் (1)**

1. நாவலர் (103)

## 263. கவிகள் பெயர்

பாவலர், கவிகள்

**கவிகள் பெயர் (1)**

1. பாவலர்

பாடவேறுபாடு—விளக்கம்

262-263-ம் நூற்பாக்களைக் கற்றோர் பெயர் கவிகள் பெயர் என்று தலைப்பிட்டு ஒரே நூற்பாவாகவும் சிலர் கொள்வர்.
கவிகள் பெயர்.
'நாவலர் கற்றோர் பாவலர் கவிகள்'-என்பது
அச்சுப்பிரதி (104)

## 264. கடிகைமாக்கள் பெயர்

மங்கலப் பாடகர், எட்டர், கடிகை மாக்கள்

**கடிகைமாக்கள் பெயர் (2)**

1. மங்கலப்பாடகர், 2. எட்டர். (105)

## 265. கூத்தர் பெயர்

கோடியர், பொருநர், நாடகியர், நிருத்தர்,
கண்ணுளர், வயிரியர், வினைஞர், நடர் என்று
எண்ணிய பெயர்கள் கூத்தர்க்கு எய்தும்.

**கூத்தர் பெயர் (8)**

1. கோடியர், 2. பொருநர், 3. நாடகியர், 4. நிருத்தர், 5. கண்ணுளர், 6. வயிரியர், 7. வினைஞர், 8. நடர்.

பாடவேறுபாடு—விளக்கம்

1:3 நாடகர்
2:3 வினையர், அவிநயர் (106)

## 266. புகழ்வோர் பெயர்

மாகதர், வந்தியர், சூதர், வேதாளியர்
பூகதர், பப்புவர், புகழ்வோர் பெயரே.

**புகழ்வோர் பெயர் (6)**

1. மாகதர்; 2. வந்தியர், 3. சூதர், 4. வேதாளியர், 5. பூகதர், 6. பப்புவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

1:2 வந்திகர், 4. வே ்தாளியர்
2:2 புகழ்ப்பியர், புலவர், அத்தாணியர். (107)

## 267. தேர்ப்பாகர் பெயர்

சூதரும், வலவரும், தேர்த்தொழிற் பாகர்.

**தேர்ப்பாகர் பெயர் (2)**

1. சூதர், 2. வலவர். (108)

## 268. யானைப்பாகர் பெயர்

ஆதோரணர், வாதுவர், யானைப்பாகர்

**யானைப்பாகர் பெயர் (2)**

1. ஆதோரணர், 2.வாதுவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

1. யாதோரணர், மாதோரணர், 4. ஆனைப்பாகர்.

(109)

## 269. குதிரைப்பாகர் பெயர்

வாதுவர், பரிமா வடிப்போரும் ஆகும்.

**குதிரைப்பாகர் பெயர் (1)**

1. வாதுவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : குதிரைவடிப்போர் பெயர். (110)

## 270. இரப்போர் பெயர்

இரவலர், இரவோர், பரிசி லாளர்,
யாசகர் என்று இவை இரப்போர் பெயரே.

**இரப்போர் பெயர் (4)**

1. இரவலர், 2. இரவோர், 3. பரிசிலாளர்,
4. யாசகர். (111)

## 271. வள்ளியோர் பெயர்

வரையாது கொடுப்போர், வள்ளியோர் ஆகும்.

**வள்ளியோர் பெயர் (1)**

1. வரையாது கொடுப்போர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வள்ளலின் பெயர். (112)

## 272 தறுகண்ணாளர் பெயர்

மானவர், வீரர், மறவர், பொருநர்,
(ஆனை) கலியர், மண்டர், மள்ளர்,
(ஏனை) வாளுழவர், ஏறாளர், கூளியர்,
தானைத் தறுகண் ணாளர் தம் பெயரே.

**தறுகண்ணாளர் பெயர் (10)**

1. மானவர், 2. வீரர், 3. மறவர், 4. பொருநர், 5. கலியர், 6. மண்டர், 7. மள்ளர், 8. வாளுழவர், 9. ஏறாளர், 10. கூளியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : படைவீரர் பெயர், போர்ச்சேவகர் பெயர், தானைத்தலைவர் பெயர். (113)

## 273. பகைஞர் பெயர்

தரியலர், தெவ்வர், மேவலர், செறுநர்,
கருதலர், சேரலர், இரிஞர், ஒன்னார்,
ஒல்லார், அரிகள், நள்ளார், அமரார்,
ஒட்டார், போற்றார், நேரார், நிகரார்,
ஒட்டலர், நேரலர், இகலோர், எதிர்ந்தோர்,
விட்டவர், மாற்றலர், முனைந்தோர் என்றாங்கு
ஒட்டிய பிறவும் பகைஞர் என்று உரைப்பர்.

**பகைஞர் பெயர் (23)**

1. தரியலர், 2. தெவ்வர், 3. மேவலர், 4. செறுநர், 5. கருதலர், 6. சேரலர், 7. இரிஞர், 8. ஒன்னார், 9. ஒல்லார், 10. அரிகள், 11. நள்ளார், 12. அமரார், 13. ஒட்டார், 14. போற்றார், 15. நேரார், 16. நிகரார், 17. ஒட்டலர், 18. நேரலர், 19. இகலோர், 20. எதிர்ந்தோர், 21. விட்டவர், 22. மாற்றலர், 23. முனைந்தோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பகைவர் பெயர்
4:2 புல்லார், பற்றார்
6:4 புல்லார்
7:1-2 பற்றலர் எட்டியர், 3-4 பகையர் என்ப.

இந்நூற்பா எட்டடியாகப் பின்வருமாறும் சில பிரதிகளில் காணப் படுகிறது:

தரியலர் தெவ்வர் மேவலர் செறுநர்
கருதலர் சேரார் ஒல்லார் இரிஞர்
ஒன்னார் அரிகள் நள்ளார் மன்னார்
போற்றார் நேரார் நிகரலர் ஒட்டலர்
பற்றலர் நேரலர் இகலோர் எதிர்ந்தோர்
ஒன்னலர் துன்னார் அடையார் முனைந்தோர்
மாற்றலர் மறவர் மறுவரர் என்றாங்கு
ஒ ்டிய பிறவும் பகைஞர் என்ப. (114)

## 274. மேவினர் பெயர்

ஒல்லுநர், துன்னுநர், ஒட்டுநர், ஒன்றுநர்,
நள்ளுநர், தொடர்ந்தோர் மேவினர் நாமம்.

**மேவினர் பெயர் (6)**

1. ஒல்லுநர். 2. துன்னுநர், 3. ஒட்டுநர், 4. ஒன்றுநர், 5. நள்ளுநர், 6. தொடர்ந்தோர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நட்பாளர் பெயர், சிநேகிதர் பெயர்.
1-3 ஒட்டினர்
2:2 துடர்ந்தோர், (115)

## 275. உறவின் பெயர்

ஒக்கல், சுற்றம், உறவு, கிளை, கேள்,
நட்பு, மேவினர், சார்ந்தவர், உற்றார்,
பந்தம், கூளி, கடும்பு, குடும்பம்,
(நம்) தமர், சிறந்தோர், நட்டோர், பரிசனம்,
அந்தம்இல் உறவு என்று அறைந்தனர் புலவர்.

**உறவின் பெயர் (17)**

1. ஒக்கல், 2. சுற்றம், 3. உறவு, 4. கிளை, 5. கேள், 6. நட்பு. 7. மேவினர், 8. சார்ந்தவர், 9. உற்றார், 10. பந்தம், 11, கூளி, 12. கடும்பு, 13. குடும்பம், 14. தமர், 15. சிறந்தோர், 16. நட்டோர், 17. பரிசனம்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : உறவுடையோர் பெயர், சுற்றத்தார் பெயர்.
1:3 இனம்
3:4 குடும்பு. (116)

## 276. ஆணின் பெயர்

ஆடவர், மைந்தர், காளை, குமரர்,
ஆடூஉ, மாந்தர், மகன் புமான், மணாளன்,
கூடிய ஆண்பெயர் ஆகக் கூறுவர்.

**ஆணின் பெயர் (9)**

1. ஆடவர், 2. மைந்தர், 3. காளை, 4. குமரர், 5. ஆடூஉ, 6. மாந்தர், 7. மகன், 8. புமான், 9. மணாளன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : ஆண்பெயர், ஆண்பாலின் பெயர்
3:4 கூறும் (117)

## 277. பெண்ணின் பெயர்

பேதை, அங்கனை, வனிதை, இளம்பிடி,
மாது, மடவாள், மகடூஉ, மங்கை,
மடந்தை, காரிகை, மானினி, வஞ்சனி,
மாயோள், ஆட்டி, பாவை, தெரிவை,
தையல், அரிவை, பெதும்பை, பிணா, மகள்,
நையும், நுண் இடை, நாரி என்று ஆங்கு
இருபதும் இரண்டும் பெண்பெயர் ஆகும்.

**பெண்ணின் பெயர் (22)**

1. பேதை, 2. அங்கனை, 3. வனிதை, 4. இளம்பிடி, 5. மாது, 6. மடவாள், 7. மகடூஉ, 8. மங்கை, 9. மடந்தை, 10. காரிகை, 11. மானினி, 12. வஞ்சனி, 13. மாயோள், 14. ஆட்டி, 15. பாவை, 16. தெரிவை, 17. தையல், 18. அரிவை, 19. பெதும்பை, 20. பிணா, 21. மகள், 22. நாரி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பெண் பெயர், பெண்பாலின் பெயர்
1:4 இளம்பிடி
2:2 மடவோள்
3:3 மானி, 4. வஞ்சினி, மஞ்சனி,
7:3-4 பெண்பாற் செய்தும், பெண்பாற் கியலும். (118)

## 278. எழுவகைப் பருவப் பெயர்

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை,
அரிவை, தெரிவை, பேரிளம் பெண்என
எழுவகைப் பருவப் பெண்பெயர் ஆகும்,

**எழுவகைப் பருவப் பெயர் (7)**

1. பேதை, 2. பெதும்பை, 3. மங்கை, 4. மடந்தை, 5. அரிவை, 6. தெரிவை, 7. பேரிளம் பெண்.

பாடவேறுபாடு—விளக்கம்

2:4 பெண்ணென்
3:1 றெழுவகைப், 3—4 பெண்பாற் கெய்தும்,
பெண்பாற்கியலும்.
இந்நூற்பாவினைத் தொடர்ந்து ஒரு பிரதியில் பின்வரும் அடிகள் காணப்படுகின்றன.

பேதை யேழும் பெதும்பை யொன்பதும்
மங்கை பன்னிரண்டு மடந்தை பதினாறும்
அரிவை பதினெட்டுந் தெரிவையிருபத் தொன்றும்
பேரிளம் பெண்வயது முப்பத்திரண்டெடன
எழுவகைப் பெண்கட்கும் வயது வகுத்தனரே. (119)

## 279. தலைவி பெயர்

கோமாள், பெருமாட்டி, குரத்தி, ஐயை,
ஆசாள், சாமி, இறைமை யாட்டி,
அடிகள், அத்தை, தலைவி பெயரே.

**தலைவி பெயர் (9)**

1. கோமாள், 2. பெருமாட்டி, 3. குரத்தி, 4. ஐயை, 5. ஆசாள், 6. சாமி, 7. இறைமையாட்டி, 8. அடிகள், 9. அத்தை.

பாடவேறுபாடு—விளக்கம்

1:2 பிராட்டி
3:2 தத்தை (120)

## 280. அருகதவப் பெண் பெயர்

பைம்மையும், கவுந்தியும், அருகதவப் பெண் பெயர்

**அருகதவப் பெண் பெயர் (2)**

1. பைம்மை, 2. கவுந்தி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அருகதவப் பெண்பாற் பெயர்,
அருந்தவப் பெண் பெயர்,

1. ஐயையும் கைம்மையும்,
2. கௌந்தியும்
3-4 அருந்தவப் பெண்பால். (121)

## 281. கலன்கழி மகளிர் பெயர்

கைம்மையும், கயினியும், கலன்கழி மகளிர்

**கலன்கழி மகளிர் பெயர் (2)**

1. கைம்மை, 2. கயினி. (122)

## 282. கோலஞ் செய்வாள் பெயர்

கோலம் புனைபெண், வண்ணமகள் என்ப.

**கோலஞ் செய்வாள் பெயர் (1)**

1. வண்ணமகள்

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வண்ண மகளிர் பெயர்
இந்நூற்பா சில சுவடிகளில் இல்லை. (123)

## 283. மலடி பெயர்

மைம்மை, வந்தி, மலடிப் பெயரே.

**மலடி பெயர் (2)**

1. மைம்மை, 2. வந்தி.

பாடவேறுபாடு—விளக்கம்

2. வந்தை, 3. மலடிகள். (124)

## 284. பொதுமாதர் பெயர்

பரத்தையும், கணிகையும், சூளையும், பொதுப்பெண்.

**பொதுமாதர் பெயர் (3)**

1. பரத்தை, 2. கணிகை, 3. சூளை. (125)

## 285. நாடகக் கணிகை பெயர்

நடியே, கூத்தி, நாடகக் கணிகை.

**நாடகக் கணிகை பெயர் (2)**

1. நடி, 2. கூத்தி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நாடகப் பெண் பெயர்
4. கன்னிகை (126)

## 286. பாண்மகள் பெயர்

பாடினி, விறலி, பாட்டி, மதங்கி,
பாடல் மகடூஉப் பாண்மகள் ஆகும்.

**பாண்மகள் பெயர் (5)**

1. பாடினி, 2. விறலி, 3. பாட்டி, 4. மதங்கி,
5. பாடல் மகடூஉ.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பாடுவாள் பெயர்.
2:1-4 பாடன் மகளும் பாடுவா ளாகும். (127)

## 287. ஆடூஉ மகடூஉப் பல்பெயர்

அணியில் பண்பில் உவமையோடு உற்றன
வரைவுஇல் ஆடூஉ மகடூஉப் பல்பெயர்
வரலாற்று முறைமையின் வந்தனர் கொளலே.

**ஆடூஉ மகடூஉப் பல்பெயர் :**

அணியும் பண்பும் உவமையும் பொருந்தித்தொன்றுதொட்டு வரும் முறையால் ஆட்சிப்பட்டு வருவனவாகிய ஆண் பெண் பல பெயர்களையும் நீக்கமின்றிக் கொள்க.

பாடவேறுபாடு—விளக்கம்

1:4 அடுத்தன (128)

## 288. உடன் நிகழ்வான் பெயர்

எமி, உடன் நிகழ்வான்.

**உடன் நிகழ்வான் பெயர் (1)**

1. எமி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : எமி யென்னும் பெயர் (129)

## 289. தனியின் பெயர்

தமி, தனி ஆகும்.

**தனியின் பெயர் (1)**

1. தமி.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தமியென்னும் பெயர்.
288, 289ஆம் நூற்பாக்களை, 'உடனிகழ்வான் பெயர் தனியின் பெயர்' என்னும் தலைப்பில் ஒரே நூற்பாவாகவும் சில ஏடுகள் கொண்டுள்ளன. (130)

## 290. குறிஞ்சி நிலமக்கள் பெயர்

குறவர், கானவர், குன்றவர், புனவர்,
இறவுளர், குறிஞ்சி நிலமக்கள் பெயரே.

**குறிஞ்சி நிலமக்கள் பெயர் (5)**

1. குறவர், 2. கானவர், 3. குன்றவர், 4. புனவர், 5. இறவுளர். (131)

## 291. குறிஞ்சிநிலப் பெண்கள் பெயர்

கொடிச்சியர், குறத்தியர், குறிஞ்சிநிலப் பெண் பெயர்.

**குறிஞ்சிநிலப் பெண்கள் பெயர் (2)**

1. கொடிச்சியர், 2. குறத்தியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : குறிஞ்சிநிலப் பெண் பெயர்.
1-2 குறத்தியர் கொடிச்சியர்
3-4 குறிஞ்சிப் பெண்பெயர். (132)

## 292. குறிஞ்சித்தலைவர் பெயர்

கானக நாடன், பொருப்பன், பொருநன்,
(ஆன) மலையன், வெற்பன், சிலம்பன்,
(சிறந்த) நண்பன், என்று இவை எல்லாம்
குறிஞ்சிக்கு இறைவன்பெயர் எனக் கூறுவர்.

**குறிஞ்சித் தலைவர் பெயர் (7)**

1. கானகநாடன், 2. பொருப்பன், 3. பொருநன், 4. மலையன், 5. வெற்பன், 6. சிலம்பன், 7. நண்பன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : குறிஞ்சிக் கிறைவன் பெயர்
1:3-4 பொருநன் பொருப்பன்
3:4 முதலாக்
4:1-2 குறிஞ்சிக் கதிபன். (133)

## 293. பாலைநில மக்கள் பெயர்

மறவர், எயினர், பாலைநில மக்கள்

**பாலைநில மக்கள் பெயர் (2)**

1. மறவர், 2. எயினர். (134)

## 294. பாலைநிலப் பெண்கள் பெயர்

மறத்தியர், எயிற்றியர், வன்கட் பேதையர்
அனைத்தும் அந்நிலத்து அரிவையர் பெயரே.

**பாலைநிலப் பெண்கள் பெயர் (3)**

1. மறத்தியர், 2. எயிற்றியர், 3. வன்கட் பேதையர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பாலைநிலப் பெண் பெயர்.
1:4 பிணாக்கள்
2:2 மன்னிலத் (135)

## 295. பாலைநிலத் தலைவர் பெயர்

மீளியும் காளையும் விடலையும் என்றுஇவை
பாலைக்கு இறைவன் பெயர்எனக் கூறுவர்.

**பாலைநிலத் தலைவர் பெயர் (3)**

1. மீளி, 2. காளை, 3. விடலை.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : பாலைக்கிறைவன் பெயர், பாலைக்கதிபன்பெயர்
2:2-4 அதிபன் பெயரெனப் பகர்வர். (136)

## 296. பாலைநில மக்கள் பொதுப்பெயர்

கொலைஞர், எயினர், வனசரர், சவரர்,
சிலவர், கானவர், மாகுலவர், கிராதர்,

புளிஞர், மறவர், வேடர் என்று ஆங்கு
அனையவர் பொதுப்பெயர் ஆதல் வேண்டும்.

**பாலைநில மக்கள் பொதுப்பெயர் (11)**

1. கொலைஞர், 2. எயினர், 3. வனசரர், 4. சவரர், 5. சிலவர், 6. கானவர், 7. மாகுலவர், 8. கிராதர், 9. புளிஞர், 10. மறவர், 11. வேடர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : வேடர், பெயர், வேடர் பொதுப்பெயர். பாலைநில மக்கட்கும் அந்நிலத் தலைவர்க்கும் பொதுப் பெயர் என்பது அச்சுப்பிரதி.
2:1 கிலவர், கில்லர்
3:1 புளிநர்
4:1 அனையவை, 3. ஆகல். (137)

## 297. முல்லைநில மக்கள் பெயர்

முல்லை யாளர், கோவலர், இடையர்,
(சொல்லிய) வண்டர், பொதுவர், ஆன் வல்லோர்,
குடவர், பாலர், தொறுவர், கோவிந்தர்,
அண்டர், கோபாலர், ஆயர், அமுதர் என்று
இங்கு இவை முல்லை நிலத்தவர் பெயரே.

**முல்லைநில மக்கள் பெயர் (14)**

1. முல்லையாளர், 2. கோவலர், 3. இடையர், 4. வண்டர், 5. பொதுவர், 6. ஆன்வல்லோர், 7. குடவர், 8. பாலர், 9. தொறுவர், 10. கோவிந்தர், 11. அண்டர், 12. கோபாலர், 13. ஆயர், 14. அமுதர்.

பாடவேறுபாடு—விளக்கம்

3:1 குட்டவர், 4. விந்தர்,
4:4 அமுதர்
5:1-2 ஒன்றிய ஆவின், 1-4 ஒன்றிய
வரியினிலத்தவர் பெயரே. (138)

## 298. முல்லைநில மகளிர் பெயர்

ஆய்ச்சியர், தொறுத்தியர், பொதுவியர், குடத்தியர்,
(வாய்த்த) இடைச்சியர் முல்லைநில மகளிர்

**முல்லைநில மகளிர் பெயர் (5)**

1. ஆய்ச்சியர், 2. தொறுத்தியர், 3. பொதுவியர், 4. குடத்தியர், 5. இடைச்சியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : முல்லை நிலப்பெண் பெயர்
1:2 தொறுவியர் (139)

## 299. முல்லைநிலத் தலைவன் பெயர்

அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன்,
கானக நாடன், முல்லைத் தலைமகன்

**முல்லைநிலத் தலைவன் பெயர் (4)**

1. அண்ணல், 2. தோன்றல், 3. குறும்பொறை நாடன்,
4. கானக நாடன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : முல்லைநிலத் தலைமகன் பெயர் (140)

## 300. நெய்தல் நிலமக்கள் பெயர்

பரதர், நுளையர், கடலர், வலையர்,
சலவர், திமிலர், நெய்தல் நிலமாக்கள்

**நெய்தல் நிலமக்கள் பெயர் (6)**

1. பரதர், 2. நுளையர், 3. கடலர், 4. வலையர்,
5. சலவர், 6. திமிலர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நெய்தனிலத்தாண்பாற் பெயர்
1:1 பரதவர்
1:4 சலவர்
2:1 வலையர் 4. மக்கள். (141)

## 301. நெய்தல் நிலப்பெண் பெயர்

நுளைச்சியர், பரத்தியர், (நுரைக்) கடற் பிணாக்கள்.

**நெய்தல் நிலப்பெண் பெயர் (2)**

1. நுளைச்சியர், 2. பரத்தியர். (142)

## 302. உப்பமைப்போர் பெயர்

அளவர், அந்நிலத்து உப்பமைப்போரே.

**உப்பமைப்போர் பெயர் (1)**

1. அளவர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : அளவர் பெயர், அளவர் நிலமறியும் பெயர்.
1-2 அளவரு மந்நிலத், அனைத்து மந்நிலத்,
அனைவரு மந்நிலத்
3-4 உப்பமைப்போர் பெயரே.
அளவ ருமண ரந்நிலத் துப்பமைப்போர்-என்றும்
சில ஏடுகளில் பாடம். (143)

## 303. நெய்தல்நிலத் தலைவன் பெயர்

கொண்கன், துறைவன், மெல்லன், புலம்பன்,
(தண்) கடற் சேர்ப்பன், நெய்தல் தலைமகன்.

**நெய்தல்நிலத் தலைவன் பெயர் (5)**

1. கொண்கன், 2. துறைவன், 3. மெல்லன்,
4. புலம்பன், 5. கடற்சேர்ப்பன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : நெய்தற்றலைமகன் பெயர்.
1:3-4 மெல்லம் புலம்பன். (144)

## 304. மருதநில மக்கள் பெயர்

களமர், தொழுவர், மள்ளர், கம்பளர்,
வினைஞர், உழவர், கடைஞர், கிளைஞர், என்று
அனையவை கழனிக்கு அடைத்தவர் பெயரே.

**மருதநில மக்கள் பெயர் (8)**

1. களமர், 2. தொழுவர், 3. மள்ளர், 4. கம்பளர்,
5. வினைஞர், 6. உழவர், 7. கடைஞர், 8. கிளைஞர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மருதநிலத்தாண்பாற் பெயர்
3:2-4 கழனிக் கமைந்ததொல் பெயரே.
3-4 கடைத்தலைவர் பெயரே. (145)

## 305. மருதநிலப் பெண்பெயர்

உழத்தியர், கடைசியர், ஆற்றுக்கா லாட்டியர்,
அடுத்த கழனிக்கு அடைத்த மகளிர்

**மருதநிலப் பெண் பெயர் (3)**

1. உழத்தியர், 2. கடைசியர், 3. ஆற்றுக்காலாட்டியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மருதநிலப் பெண்பாற் பெயர்
1:2 கடைச்சியர்
2:1 அடைத்த 3. கடைதீதலை. (146)

## 306. மருதநிலத் தலைமகன் பெயர்

ஊரன், மகிழ்நன், கிழவன், என்றுஇவை
சாலி மருதத் தலைமகன் பெயரே.

**மருதநிலத் தலைமகன் பெயர் (3)**

1. ஊரன், 2. மகிழ்நன், 3. கிழவன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மருதத் தலைமகன் பெயர்,
மருதநிலத் தலைவன் பெயர்.
1:2 மகிணன், மகுணன்,
2:3 தலைவன் (147)

## 307. மருதநிலத் தலைவி பெயர்

மனைவி, கிழத்தி, இல்லாள், இல், என்று
அனையவை மருதத் தலைமகட்கு ஆகும்.

**மருதநிலத் தலைவி பெயர் (4)**

1. மனைவி, 2. கிழத்தி, 3. இல்லாள், 4. இல்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மருதத்தலைவி பெயர்
2:2-4 தலைமகட் காகு மென்ப, தலைமகட் காகும் பெயரே
2:3 தலைவிக் (148)

## 308. முல்லைத்தலைவி பெயர்

அனையவை முல்லைத் தலைவிக்கும் ஆகும்,

**முல்லைத்தலைவி பெயர் (4)**

மருதத் தலைவிக்குரிய நான்கு பெயர்களும்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : முல்லைநிலத்தலைவி பெயர்.
4. பெயரே. (149)

## 309. தமர் பெயர்

தாயத்தார், ஞாதியர், தம்குடித் தமரே,

**தமர் பெயர் (2)**

1. தாயத்தார், 2. ஞாதியர்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தாயாதிகள் பெயர், ஞாதியர் பெயர்
1. தாயர். 2. ஞாதிகள். (150)

## 310. தந்தை பெயர்

அத்தனும், தாதையும், பிதாவும், ஐயனும்,
அப்பனும், தந்தையின் முறைப்பெயர் ஆகும்.

**தந்தை பெயர் (5)**

1. அத்தன், 2. தாதை, 3. பிதா, 4. ஐயன், 5. அப்பன்.

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : தகப்பன் பெயர்
1:4 அம்மானும்
2-2-3 தந்தை முறைப்பெயர் (151)

## 311. முதாதை பெயர்

தாதை தாதை, மூதாதை ஆகும்.

**மூதாதை பெயர் (1)**

1. தாதை தாதை

பாடவேறுபாடு—விளக்கம்

தலைப்பு : மூதாதை என்னும் பெயர் பாட்டன் பெயர்.
1:2 தாதைதன் றாதை
இதனோடு இரண்டாம் அடியாக,
'பேத மில்லாப் பிதாமகன் பாட்டன்' என்று ஓர்
ஏட்டில் காணப்பட்டது. (152)

## 312. மாமன் பெயர்

மாதுலன் என்பது மாமன் முறைப்பெயர்.

**மாமன் பெயர் (1)** மாதுலன்

1. மாதுலர் (153)

## 313. தமையன் பெயர்

முன்பிறந் தானே, தன்னை, என்றுஇவை
தமையன் என்னும் பெயர்க்குத் தகுமே.

**தமையன் பெயர் (2)**

1. முன்பிறந்தான், 2. தன்னை,

பாடவேறுபாடு—விளக்கம்

309-313 அச்சுப்பிரதியில் இல்லை. இவற்றிற்குப்பதிலாக பின்வரும் நூற்பாக்கள் காணப்படுகின்றன.

முன்றோன்றலின் பெயர்

முன்னை முன்னிளவல் முன்றோன்ற லாகும்.
இதற்கு, 'முன்னை முன்னே முன்றோன்ற லாகும்.
முன்னவன் சேட்டன் முன்றோன்ற லண்ணன்'
என்னும் பாடவேறுபாடுகளும் காணப்படுகின்றன

பின்றோன்றலின் பெயர்

பின்னை பின்னிளவில் பின்றோன்ற லாகும்.
இதற்கு, 'பின்னை யிளவல் பின்றோன்ற லாகும்.
அனுசனுங் கனிட்டனு மாகுமென்ப'
என்னும் பாடவேறுபாடுகளும் காணப்படுகின்றன.
எனினும் இவை பெரும்பான்மையான பிரதிகளிலும்
காணப்படவில்லை. (154)

## 314. தாயின் பெயர்

அன்னை, பயந்தாள், ஆய், யாய், அம்மனை,
அவ்வை, ஈன்றாள், மோய், தாய் என்ப.

**தாயின் பெயர் (8)**

1. அன்னை, 2. பயந்தாள், 3. ஆய், 4. யாய், 5. அம்மனை, 6. அவ்வை, 7. ஈன்றாள். 8. மோய்.

பாடவேறுபாடு—விளக்கம்

**1:4 அம்மை,**
**2:3-4 மோய் தாய் மாதா, மாதா மோய்தாய்.** (155)

